அறிமுகம்

மதத் தலைவர்கள், பெற்றோர்கள், ஆசிரியர்கள், மற்றும் வயதில் மூத்தவர்களின் கால்களில் விழுந்து பணியும் வழக்கம் முஸ்லிமல்லாத மக்களிடம் நடைமுறையில் உள்ளது.

சில முஸ்லிம்களும் இதைக் காப்பியடித்து மத குருமார்களின் கால்களில் விழுந்து பணிவதைப் புனிதமான காரியமாகக் கருதுகின்றனர்.

ஒரு மனிதனை எப்படி மதிக்க வேண்டும்? எந்த அளவுக்குக் கண்ணியப்படுத்த வேண்டும் என்று இஸ்லாம் கற்றுத்தந்துள்ளது. அதைப் பேணாமல் பிற மதத்தவர்களைக் காப்பியடித்து சில முஸ்லிம்கள் மத குருமார்களின் கைகளைத் தொட்டு முத்தமிடுகின்றனர். அவர்களின் கையால் அற்பமான பொருட்களை வாங்குவது பெரும் பாக்கியம் என்று கருதுகின்றனர். மதகுருமார்களை மனித நிலைக்கு மேல் உயர்த்துகின்றனர்.

இவற்றுக்கு இஸ்லாத்தில் அனுமதி இல்லை என்று விளக்குவதுடன் இவற்றை ஆதரிப்பவர்கள் எடுத்து வைக்கும் வாதங்களுக்கும் இந்த நூலில் தக்க பதில் சொல்லப்பட்டுள்ளது. மத குருமார்கள் மீது பக்தி கொண்டு வழிதவறிய மக்களின் கண்களை இந்நூல் திறக்க வேண்டும் என்று அல்லாஹ்வை இறைஞ்சுகிறோம்.

அன்புடன் நபீலா பதிப்பகம்

## மனிதனுக்கு மனிதன் மரியாதை செய்வது எப்படி?

தம்மை விட ஏதோ ஒருவகையில் பெரியவர்களாக இருப்பவர்களுக்கு மரியாதை செய்ய வேண்டும் என்ற எண்ணம் அதிகமான மனிதர்களின் உள்ளங்களில் இயல்பாகவே அமைந்துள்ளது. தன்னைவிட ஏதோ ஒருவகையில் சிறியவர்களாக இருப்பவர்கள் தனக்கு மரியாதை செலுத்த வேண்டும் என்பதும் மனிதர்களின் எதிர்பார்ப்பாக அமைந்துள்ளது.

இது நல்ல பண்பு தான் என்றாலும் மரியாதை செலுத்துவதன் எல்லை எது என்பதை மரியாதை செய்பவர்களும் அறியவில்லை. மரியாதையை எதிர்பார்ப்பவர்களும் அறியவில்லை.

ஏதோ ஒரு வகையில் நம்மைவிட ஒருவர் பெரியவராக இருந்தால் அவரது தேவைகளில் நம்மால் இயன்றதைச் செய்து கொடுக்கலாம். அவர்கள் நம்மிடம் எதிர்பார்க்கும் வேலைகளில் மார்க்கத்துக்கு முரணில்லாதவைகளைச் செய்து கொடுக்கலாம். இதுதான் அவர்களை மதிப்பதாகும்.

மரியாதைக்குரியவர்களின் கால்களில் விழுவதும், அவர்களைப் பார்ப்பதையும், தொடுவதையும் புனிதமாகக் கருதுவதும், அவர்களிடம் ஆசி வாங்குவதும், அவர்களைக் கண்டவுடன் கும்பிடு போடுவதும், எழுந்து நிற்பதும் இஸ்லாத்தின் பார்வையில் மரியாதை செலுத்துவதாக ஆகாது.

முஸ்லிம்களைப் பொருத்தவரை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தாம் அதிக மரியாதைக்கு உரியவர்கள். தாய் தந்தையரை விடவும் அதிகம் மரியாதை செய்யத் தக்கவர்கள்.

ஆனாலும் தனக்கு மரியாதை செய்வதற்குக் கூட நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் எல்லை வகுத்துச் சென்றுள்ளார்கள். அந்த எல்லையை மரியாதை என்ற பெயரில் தாண்டினால் மார்க்கத்தில் அது குற்றமாகும்.

3445 - حَدَّثَنَا الحُمَيْدِيُّ، حَدَّثَنَا سُفْيَانُ، قَالَ: سَمِعْتُ الزُّهْرِيَّ، يَقُولُ: أَخْبَرَنِي عُبَيْدُ اللَّهِ بْنُ عَبْدِ اللَّهِ، عَنِ ابْنِ عَبَّاسٍ، سَمِعَ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُ، يَقُولُ عَلَى المِنْبَرِ: سَمِعْتُ النَّبِيَّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ يَقُولُ: لاَ تُطْرُونِي، كَمَا أَطْرَتْ النَّصَارَى ابْنَ مَرْيَمَ، فَإِنَّمَا أَنَا عَبْدُهُ، فَقُولُوا عَبْدُ اللَّهِ، وَرَسُولُهُ- صحيح البخاري

மர்யமின் மகனாகிய ஈஸாவை கிறித்தவர்கள் எல்லைமீறிப் புகழ்ந்தது போல் என்னை நீங்கள்எல்லைமீறிப் புகழாதீர்கள்! நான் அல்லாஹ்வின் அடிமைதான். எனவே என்னை அல்லாஹ்வின் தூதர் என்றும், அல்லாஹ்வின் அடிமை என்றும் கூறுங்கள் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர் : இப்னு அப்பாஸ் (ரலி)

நூல் : புகாரி 3445

ஒருவருக்குச் செலுத்தும் மரியாதையின் எல்லை எது என்பதை இந்த ஹதீஸ் தெளிவுபடுத்துகிறது.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் என்றாலும், அவர்கள் அல்லாஹ்வின் அடிமையாவார்கள்.

எல்லா மனிதர்களும் எப்படி அல்லாஹ்வின் அடிமைகளாக இருக்கிறார்களோ அது போல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களும் அல்லாஹ்வின் அடிமையாக உள்ளனர். மனிதர்களுக்கான எல்லைக்கு மேல் அவர்கள் உயர முடியாது என்பது அல்லாஹ்வின் அடிமை என்பதன் கருத்தாகும்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் அடிமை என்றாலும் அவர்கள் மூலம் தான் அல்லாஹ் மனிதர்களுக்கான செய்திகளைக் கொடுத்து அனுப்பியுள்ளான் என்பதால் அவர்கள் அல்லாஹ்வின் தூதராகவும் உள்ளார்கள்.

அவர்களின் கட்டளைகளும், வழிகாட்டலும் அவர்களின் சுயவிருப்பத்தின்படி அமைந்தவை அல்ல. படைத்த இறைவன் மூலம் அறிவித்துக் கொடுக்கப்பட்டவையே என்பது அல்லாஹ்வின் தூதர் என்பதன் கருத்தாகும்.

எனவே அவர்களை அப்படியே பின்பற்றி வாழ வேண்டும். இந்த வகையில் அல்லாஹ்வின் மற்ற அடிமைகளில் இருந்து நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் வேறுபடுகிறார்கள்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு அல்லாஹ்வின் அடிமை என்ற தகுதியும், அல்லாஹ்வின் தூதர் என்ற தகுதியும் ஆகிய இரு தகுதிகள் உள்ளன. ஆனால் அவர்களைத் தவிர இந்தச் சமுதாயத்தில் யாராக இருந்தாலும் அவர்களுக்கு அல்லாஹ்வின் அடிமை என்ற தகுதி மட்டுமே உள்ளது.

எல்லா மனிதர்களும் எப்படி அல்லாஹ்வின் அடிமைகளாக இருக்கிறார்களோ அவ்வாறே பெரியார்களும் அல்லாஹ்வின் அடிமைகள் தான். அவர்களின் மனிதத் தன்மையில் எந்த மாற்றமும் ஏற்படாது.

ஒருவரைப் பார்ப்பதே புனிதம் என்று நாம் நம்பினால் அவர் நம்மைப் போன்ற அடிமை அல்ல என்ற நம்பிக்கை அதனுள் அடங்கியுள்ளது.

ஒருவரைத் தொடுவது, அவர் தொட்ட பொருள்களைப் பெறுவது, அவர் சொல்லும் அருள் வாக்கு பலிக்கும் என்று நம்புவது ஆகியவை அவர் மற்றவர்களைப் போன்ற அடிமை அல்ல என்ற கருத்தை உள்ளடக்கியுள்ளது.

இது போன்ற நம்பிக்கையும், மரியாதையும் இஸ்லாத்துக்கு எதிரானது என்பதற்கு இந்த ஒரு நபிமொழியே போதிய ஆதாரமாகும்.

ஆனாலும் இது குறித்து தெளிவான இன்னும் பல ஆதாரங்களும் உள்ளன.

மதகுருமார்கள், மார்க்க அறிஞர்கள், பக்குவம் பெற்ற பெரியார்கள் என்று கருதப்படுவோர் தமக்கு எத்தகைய மரியாதையை எதிர்பார்க்கிறார்கள்? மக்களிடம் எப்படி நடந்து கொள்கிறார்கள் என்று கவனியுங்கள்! மக்களும் அவர்களிடம் எதனை எதிர்பார்க்கின்றனர் என்று எண்ணிப்பாருங்கள்!

தமது ஊர் மக்கள் எந்த வகையில் ஆடை அணிகிறார்களோ அது போன்ற ஆடைகளை அணியாமல் தங்களுக்கு மட்டுமே சிறப்பான ஆடைகளை இந்த பெரியவர்கள்(?) அணிகின்றனர். தங்களைப் பார்த்தவுடன் மகான்கள் என்று மக்கள் மதிக்க வேண்டும் என்பதே இதற்குக் காரணம்.

இவர்களுக்குப் பெற்றோர்கள் சூட்டிய பெயர் மட்டும் போதாது. பெயர்களுடன் மவ்லானா, மவ்லவி, ஹஜ்ரத், கிப்லா போன்ற அடைமொழியுடன் தான் மக்கள்

தம்மை அழைக்க வேண்டும் எனவும் பெரியார்கள் பெயரில் உலா வருவோர் விரும்புகின்றனர்.

மற்றவர்கள் இப்படி அழைப்பது ஒரு புறமிருக்கட்டும். இந்த மார்க்க அறிஞர்கள் யாருக்காவது கடிதம் எழுதி கையெழுத்திடும் போது இப்படிக்கு மவ்லானா, மவ்லவி, அல்ஹாஜ் இப்ராஹீம் கான லில்லாஹ் என்று கையெழுத்து போடுவார்கள். இப்ராஹீம் என்பது மட்டும் தான் இவரது பெயர். மற்றவை மண்டைக்கனம் அதிகரித்ததால் தம்மைத் தாமே புகழ்ந்து கொள்வதற்காக இவர்கள் உருவாக்கிக் கொண்டவையாகும்.

பெரியார்கள் என்று பெயரெடுத்தவர்கள் தான் இப்படி நடந்து கொள்கிறார்கள் என்றால் மக்களும் அப்படித்தான் உள்ளனர்.

பெரியவர்கள் எதிரில் வந்தால் சாலையை விட்டு கீழே இறங்கி நின்று விட்டு அவர் போன பின்னர் தான் மக்கள் செல்ல வேண்டும்.

இந்தப் பெரியவர்கள் நடந்து சென்றால் அவர்களை முந்திச் செல்லக் கூடாது.

அவர்கள் முன்னால் கைகட்டி வாய் பொத்தி மண்டியிட்டு அமர வேண்டும்.

அவர்கள் கூறும் எந்த விஷயத்திலும் எதிர்க் கேள்வி கேட்கக் கூடாது.

நாம் முக்கியமாக பேசிக் கொண்டு இருக்கும் போது அவர்கள் வந்தால் உடனே நாம் பேச்சை நிறுத்த வேண்டும்.

நாம் அமர்ந்திருக்கும் போது அவர்கள் வந்துவிட்டால் உடனே எழுந்துவிட வேண்டும்.

அவர்கள் வெளியே வந்தால் அவர்கள் வரும் போது அவர்களின் செருப்பைக் காலில் மாட்டி விட வேண்டும்.

அவர்கள் மற்றவர்களைப் போல் விளையாடவோ, உழைக்கவோ கூடாது.

இப்படித்தான் மத குருமார்கள் மதிக்கப்படுகிறார்கள்.

இவற்றுக்கு இஸ்லாத்தில் அனுமதி உண்டா? அல்லாஹ்வின் தூதர் அவர்களுக்கு கூடுதல் தகுதி இருந்தும் அவர்கள் கூட இப்படி நடந்து கொள்ளவில்லை என்பதற்கும், மக்களோடு மக்களாக கலந்து வாழ்ந்தார்கள் என்பதற்கும் ஏராளமான சான்றுகள் உள்ளன.

## பெயர் சொல்லி அழைக்கப்பட்ட நபிகள் நாயகம்

5809 - حَدَّثَنَا إِسْمَاعِيلُ بْنُ عَبْدِ اللَّهِ، قَالَ: حَدَّثَنِي مَالِكٌ، عَنْ إِسْحَاقَ بْنِ عَبْدِ اللَّهِ بْنِ أَبِي طَلْحَةَ، عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ، قَالَ: «كُنْتُ أَمْشِي مَعَ رَسُولِ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ وَعَلَيْهِ بُرْدٌ نَجْرَانِيٌّ غَلِيظُ الحَاشِيَةِ»، فَأَدْرَكَهُ أَعْرَابِيٌّ فَجَبَذَهُ بِرِدَائِهِ جَبْذَةً شَدِيدَةً، حَتَّى «نَظَرْتُ إِلَى صَفْحَةِ عَاتِقِ رَسُولِ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ قَدْ أَثَّرَتْ بِهَا حَاشِيَةُ البُرْدِ مِنْ شِدَّةِ جَبْذَتِهِ»، ثُمَّ قَالَ: يَا مُحَمَّدُ مُرْ لِي مِنْ مَالِ اللَّهِ الَّذِي عِنْدَكَ، «فَالْتَفَتَ إِلَيْهِ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ ثُمَّ ضَحِكَ، ثُمَّ أَمَرَ لَهُ بِعَطَاءٍ»

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடித்த விளிம்புகளைக் கொண்ட நஜ்ரான் நாட்டு சால்வையைப் போர்த்தியிருக்க நான் அவர்களுடன் நடந்து சென்று கொண்டிருந்தேன். அப்போது அவர்களை ஒரு கிராமவாசி கண்டு அவர்களுடைய சால்வையால் அவர்களைக் கடுமையாக இழுத்தார். எந்த அளவிற்கென்றால், அவர் கடுமையாக இழுத்த காரணத்தால் சால்வை விளிம்பின் அடையாளம் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடைய தோளின் ஒரு பக்கத்தில் பதிந்திருப்பதைக் கண்டேன். பிறகு அந்தக் கிராமவாசி, முஹம்மதே! உங்களிடமிருக்கும் இறைவனின் செல்வத்திலிருந்து எனக்கும் கொடுக்கும்படி கட்டளையிடுங்கள் என்றார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவர் பக்கம் திரும்பிச் சிரித்தார்கள். அவருக்குக் கொடுக்கும்படி உத்தரவிட்டார்கள்.

அறிவிப்பவர் : அனஸ் பின் மாலிக் (ரலி)

நூல் : புகாரி 5809 அல்லாஹ்வின் தூதராகவும், மாபெரும் சாம்ராஜ்யத்தின் அதிபராகவும் இருந்த நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை முன்பின் அறிமுகமில்லாத சாதாரண மனிதரால் நெருங்க முடிகிறது. பெயரைச் சொல்லி அழைக்க முடிகிறது. சட்டையைப் பிடித்து இழுக்க முடிகிறது. கடுமையான முறையில் கோரிக்கை வைக்க முடிகிறது. இது நபிகள் நாயகத்தைக் கடுகளவும் பாதிக்கவில்லை. அவரது கோரிக்கையை நிறைவேற்ற சிரித்த முகத்துடன் ஆணையிடுகிறார்கள்.

ஹஜரத் கிப்லாக்களின் சட்டையைப் பிடித்து இழுத்து கேள்வி கேட்க முடியுமா? ஹஜரத் கிப்லாக்களின் பெயரைச் சொல்லி அழைக்க முடியுமா?

அப்படியானால் இவர்கள் நபிவழிக்கு எதிரான மரியாதையை தமக்காக எதிர்பார்க்கிறார்கள் என்பது உறுதியாகிறது.

63 - حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ يُوسُفَ، قَالَ: حَدَّثَنَا اللَّيْثُ، عَنْ سَعِيدٍ هُوَ المَقْبُرِيُّ، عَنْ شَرِيكِ بْنِ عَبْدِ اللَّهِ بْنِ أَبِي نَمِرٍ، أَنَّهُ سَمِعَ أَنَسَ بْنَ مَالِكٍ، يَقُولُ: بَيْنَمَا نَحْنُ جُلُوسٌ مَعَ النَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ فِي المَسْجِدِ، دَخَلَ رَجُلٌ عَلَى جَمَلٍ، فَأَنَاخَهُ فِي المَسْجِدِ ثُمَّ عَقَلَهُ، ثُمَّ قَالَ لَهُمْ: أَيُّكُمْ مُحَمَّدٌ؟ وَالنَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ مُتَّكِئٌ بَيْنَ ظَهْرَانَيْهِمْ، فَقُلْنَا: هَذَا الرَّجُلُ الأَبْيَضُ المُتَّكِئُ. فَقَالَ لَهُ الرَّجُلُ: يَا ابْنَ عَبْدِ المُطَّلِبِ فَقَالَ لَهُ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «قَدْ أَجَبْتُكَ». فَقَالَ الرَّجُلُ لِلنَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: إِنِّي سَائِلُكَ فَمُشَدِّدٌ عَلَيْكَ فِي المَسْأَلَةِ، فَلاَ تَجِدْ عَلَيَّ فِي نَفْسِكَ؟ فَقَالَ: «سَلْ عَمَّا بَدَا لَكَ» فَقَالَ: أَسْأَلُكَ بِرَبِّكَ وَرَبِّ مَنْ قَبْلَكَ، آللَّهُ أَرْسَلَكَ إِلَى النَّاسِ كُلِّهِمْ؟ فَقَالَ: «اللَّهُمَّ نَعَمْ». قَالَ: أَنْشُدُكَ بِاللَّهِ، آللَّهُ أَمَرَكَ أَنْ نُصَلِّيَ الصَّلَوَاتِ الخَمْسَ فِي اليَوْمِ وَاللَّيْلَةِ؟ قَالَ: «اللَّهُمَّ نَعَمْ». قَالَ: أَنْشُدُكَ بِاللَّهِ، آللَّهُ أَمَرَكَ أَنْ نَصُومَ هَذَا الشَّهْرَ مِنَ السَّنَةِ؟ قَالَ: «اللَّهُمَّ نَعَمْ». قَالَ: أَنْشُدُكَ بِاللَّهِ، آللَّهُ أَمَرَكَ أَنْ تَأْخُذَ هَذِهِ الصَّدَقَةَ مِنْ أَغْنِيَائِنَا فَتَقْسِمَهَا عَلَى فُقَرَائِنَا؟ فَقَالَ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «اللَّهُمَّ نَعَمْ». فَقَالَ الرَّجُلُ: آمَنْتُ بِمَا جِئْتَ بِهِ، وَأَنَا رَسُولُ مَنْ وَرَائِي مِنْ قَوْمِي، وَأَنَا ضِمَامُ بْنُ ثَعْلَبَةَ أَخُو بَنِي سَعْدِ بْنِ بَكْرٍ

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுடன் நாங்கள் பள்ளிவாசலில் அமர்ந்திருந்த போது ஒட்டகத்தில் ஒரு மனிதர் வந்து பள்ளி(யின் வளாகத்தி)ல் ஒட்டகத்தைப் படுக்கவைத்து அத(ன் முன்னங்காலி)னை மடக்கிக்கட்டினார். பிறகு மக்களிடம் உங்களில் முஹம்மது அவர்கள் யார்?' என்று கேட்டார். - அப்போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மக்களிடையே சாய்ந்து அமர்ந்திருந்தார்கள். - இதோ சாய்ந்து அமர்ந்திருக்கும் இந்த வெள்ளை நிற மனிதர்தாம்' என்று நாங்கள் சொன்னோம். உடனே அம்மனிதர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை அப்துல் முத்தலிபின் (மகனின்) புதல்வரே!' என்றழைத்தார். அதற்கு நபியவர்கள் என்ன விஷயம்? என்று கேட்டார்கள். அப்போது அம்மனிதர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் நான் உங்களிடம் சில கேள்விகள் கேட்கப் போகிறேன். சில கடினமான கேள்விகளையும் நான் கேட்கப் போகிறேன். அதற்கு நீங்கள் என் மீது கோபப்பட்டுவிடக் கூடாது என்றார். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் உம் மனதில் பட்டதைக் கேளும்! என்றனர்.

உடனே அம்மனிதர் உம்முடைய, உம் முன்னோருடைய இரட்சகன் மீது ஆணையாகக் கேட்கிறேன்; அல்லாஹ்தான் உம்மை மனித இனம் முழுவதற்கும் தூதராக அனுப்பினானா?' என்றார். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஆம், அல்லாஹ் சாட்சியாக! என்றனர். அடுத்து அவர் அல்லாஹ்வின் பொருட்டால் உம்மிடம் நான் கேட்கிறேன்; அல்லாஹ்தான் இரவிலும் பகலிலுமாக (நாளொன்றுக்கு) ஐவேளைத் தொழுகைகளைத் தொழுமாறு உமக்குக் கட்டளையிட்டிருக்கின்றானா? என்று கேட்டார். அதற்கும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஆம், அல்லாஹ் சாட்சியாக என்றனர். அவர் அல்லாஹ்வின் பொருட்டால் உம்மிடம் நான் கேட்கிறேன்; அல்லாஹ்தான் ஒவ்வொரு ஆண்டிலும் இந்த

மாதத்தில் நோன்பு நோற்க வேண்டும் என்று உமக்குக் கட்டளையிட்டிருக்கிறானா? என்று கேட்டார். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஆம், அல்லாஹ் சாட்சியாக!' என்றனர். அவர், அல்லாஹ்வின் பொருட்டால் உம்மிடம் நான் கேட்கிறேன்: அல்லாஹ்தான் எங்கள் செல்வர்களிடமிருந்து இந்த தர்மத்தைப் பெற்று எங்கள் வறியோரிடையே விநியோகிக்குமாறு உமக்குக் கட்டளையிட்டிருக்கின்றானா? என்று கேட்டார். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், ஆம், அல்லாஹ் சாட்சியாக!' என்றனர்.

(இவற்றைக் கேட்டுவிட்டு) அம்மனிதர் நீங்கள் (இறைவனிடமிருந்து) கொண்டு வந்தவற்றை நான் நம்பி ஏற்கின்றேன் என்று கூறிவிட்டு நான், எனது கூட்டத்தார்களில் இங்கு வராமல் இருப்பவர்களின் தூதுவனாவேன்; நான்தான் பனூ சஅத் பின் பக்ர் குலத்தாரின் சகோதரன் ளிமாம் பின் ஸஅலபா என்றும் கூறினார்.

அறிவிப்பவர் : அனஸ் பின் மாலிக் (ரலி)

நூல் : புகாரி 63

பொதுவாக தலவர்கள் ஒரு சபையில் அமர்ந்திருக்கும் போது அவர்கள் தனி இருக்கையிலோ அல்லது தனி அடையாளத்துடனோ காணப்படுவார்கள். அல்லது மக்களைவிட்டும் தனித்துக் காட்டும் ஏதோ ஒரு அடையாளத்துடனே காணப்படுவார்கள். ஆனால் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஒரு சபையில் இருக்கிறார்கள். முன்பின் அவர்களைப் பார்த்திராத ஒருவர் வந்து முஹம்மது யார் என்று கேட்கிறார். இதிலிருந்து என்ன தெரிகிறது? முழங்காலுக்குக் கீழ் ஜுப்பா, ஏழரை முழ தலைப்பாகை என்ற அளவுக்குக் கூட மக்களிடமிருந்து வேறுபடுத்திக் காட்டும் எந்த அடையாளமும் இல்லாமல் மக்களில் ஒருவராகவே இருக்கிறார்கள். நபித்தோழர்கள் இவர் தான் முஹம்மத் என்று கூறிய பிறகுதான் அவரால் நபிகள் நாயகத்தை அறிய முடிந்தது. அப்படியானால் ஹஜரத் கிப்லாக்கள் நபிவழிக்கு எதிராகவே இந்த வெற்று மரியாதையை விரும்புகிறார்கள் என்பது தெரிகிறது.

முஹம்மத் யார் என்று அந்த மனிதர் கேட்ட உடன் நபிகள் நாயகத்தை உயிருக்கும் மேலாக மதித்த எந்த நபித்தோழரும் கோபப்படவில்லை. எப்படி முஹம்மது என்று பெயர் சொல்லி விசாரிக்கலாம் எனக் கேட்கவில்லை. நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அப்படித்தான் தமது தோழர்களுக்குப் பயிற்றுவித்துள்ளார்கள் என்று தெரிகிறது.

இதை இன்றைய முஸ்லிம் மதகுருமார்களுடன் ஒப்பிட்டுப் பாருங்கள்! இஸ்லாத்துக்கும், இவர்களுக்கும் இந்த விஷயத்தில் எந்தச் சம்மந்தமும் இல்லை என்பதை அறியலாம்.

4638 - حَدَّثَنَا مُحَمَّدُ بْنُ يُوسُفَ، حَدَّثَنَا سُفْيَانُ، عَنْ عَمْرِو بْنِ يَحْيَى المَازِنِيِّ، عَنْ أَبِيهِ، عَنْ أَبِي سَعِيدٍ الخُدْرِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُ، قَالَ: جَاءَ رَجُلٌ مِنَ اليَهُودِ إِلَى النَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ قَدْ لُطِمَ وَجْهُهُ، وَقَالَ: يَا مُحَمَّدُ، إِنَّ رَجُلًا مِنْ أَصْحَابِكَ مِنَ الأَنْصَارِ لَطَمَ فِي وَجْهِي، قَالَ: «ادْعُوهُ» فَدَعَوْهُ، قَالَ: «لِمَ لَطَمْتَ وَجْهَهُ؟» قَالَ: يَا رَسُولَ اللَّهِ، إِنِّي مَرَرْتُ بِاليَهُودِ، فَسَمِعْتُهُ يَقُولُ: وَالَّذِي اصْطَفَى مُوسَى عَلَى البَشَرِ، فَقُلْتُ: وَعَلَى مُحَمَّدٍ، وَأَخَذَتْنِي غَضْبَةٌ فَلَطَمْتُهُ، قَالَ: «لَا تُخَيِّرُونِي مِنْ بَيْنِ الأَنْبِيَاءِ، فَإِنَّ النَّاسَ يَصْعَقُونَ يَوْمَ القِيَامَةِ، فَأَكُونُ أَوَّلَ مَنْ يُفِيقُ، فَإِذَا أَنَا بِمُوسَى آخِذٌ بِقَائِمَةٍ مِنْ قَوَائِمِ العَرْشِ، فَلَا أَدْرِي أَفَاقَ قَبْلِي أَمْ جُزِيَ بِصَعْقَةِ الطُّورِ»

யூதர்களில் ஒருவர் (அன்சாரி ஒருவரிடம்) தமது முகத்தில் அறைவாங்கிக் கொண்டு நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் வந்து, முஹம்மதே! உங்கள் அன்சாரித் தோழர்களில் ஒருவர் என் முகத்தில் அறைந்துவிட்டார் என்று சொன்னார். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், அவரைக் கூப்பிடுங்கள் என்று சொன்னார்கள். உடனே மக்கள் அவரை அழைத்(து வந்)தனர். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், நீங்கள் இவர் முகத்தில் ஏன் அறைந்தீர்கள்? என்று கேட்க அவர், அல்லாஹ்வின் தூதரே! நான் யூதர்களைக் கடந்து சென்றேன். அப்போது இவர், மனிதர்கள் அனைவரிலும் மூஸாவை (சிறந்தவராக)த் தேர்ந்தெடுத்தவன் மீது சத்தியமாக என்று சொல்லக் கேட்டேன். உடனே நான், முஹம்மதை விடவுமா? என்று கேட்டேன். எனக்குக் கோபம் மேலிட, நான் இவரை அறைந்துவிட்டேன் என்று சொன்னார். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், இறைத்தூதர்களுக்கிடையே என்னைச் சிறந்தவர் ஆக்காதீர்கள். ஏனெனில், மக்கள் மறுமை நாளில் மூர்ச்சையாகி விடுவார்கள். மூர்ச்சை தெளிந்து எழுகின்றவர்களில் முதல் ஆளாக நான் இருப்பேன். அப்போது நான் மூஸாவின் அருகே இருப்பேன். அவர் இறைவனுடைய சிம்மாசனத்தின் கால்களில் ஒன்றைப் பிடித்துக் கொண்டிருப்பார். அவர் எனக்கு முன்பே மூர்ச்சை தெளிந்து

(எழுந்து)விட்டாரா? அல்லது தூர்சீனா' மலையில் அடைந்த மூர்ச்சைக்குப் பதிலாக இங்கு (மூர்ச்சையாக்கப்படாமல்) விட்டு விடப்பட்டாரா என்று எனக்குத் தெரியாது என்று சொன்னார்கள்.

அறிவிப்பவர் : அபூ சயீத் அல்குத்ரீ (ரலி)

நூல் : புகாரி 4638

சிறுபான்மைச் சமுதாயத்தைச் சேர்ந்த யூதர் ஒருவர் தனக்கு முஸ்லிமால் ஏற்பட்ட பாதிப்பைப் பற்றி முறையிட வந்த போது முஹம்மதே என்று அழைக்கிறார். இதற்காக நபிகளோ, மற்றவர்களோ கோபப்படவில்லை.

ஏராளமான அடைமொழிகளுடன் தாங்கள் அழைக்கப்படுவதில் மகிழ்ச்சி அடையும் உலமாக்களுக்கும், இஸ்லாத்துக்கும் இந்த விஷயத்தில் சம்மந்தம் இருக்கிறதா என்று சிந்தித்துப் பாருங்கள்!

3635 - حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ يُوسُفَ، أَخْبَرَنَا مَالِكُ بْنُ أَنَسٍ، عَنْ نَافِعٍ، عَنْ عَبْدِ اللَّهِ بْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا، أَنَّ اليَهُودَ جَاءُوا إِلَى رَسُولِ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، فَذَكَرُوا لَهُ أَنَّ رَجُلًا مِنْهُمْ وَامْرَأَةً زَنَيَا، فَقَالَ لَهُمْ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: «مَا تَجِدُونَ فِي التَّوْرَاةِ فِي شَأْنِ الرَّجْمِ». فَقَالُوا: نَفْضَحُهُمْ وَيُجْلَدُونَ، فَقَالَ عَبْدُ اللَّهِ بْنُ سَلاَمٍ: كَذَبْتُمْ إِنَّ فِيهَا الرَّجْمَ فَأَتَوْا بِالتَّوْرَاةِ فَنَشَرُوهَا، فَوَضَعَ أَحَدُهُمْ يَدَهُ عَلَى آيَةِ الرَّجْمِ، فَقَرَأَ مَا قَبْلَهَا وَمَا بَعْدَهَا، فَقَالَ لَهُ عَبْدُ اللَّهِ بْنُ سَلاَمٍ: ارْفَعْ يَدَكَ، فَرَفَعَ يَدَهُ فَإِذَا فِيهَا آيَةُ الرَّجْمِ، فَقَالُوا: صَدَقَ يَا مُحَمَّدُ، فِيهَا آيَةُ الرَّجْمِ، فَأَمَرَ بِهِمَا رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ فَرُجِمَا، قَالَ عَبْدُ اللَّهِ: فَرَأَيْتُ الرَّجُلَ يَجْنَأُ عَلَى المَرْأَةِ يَقِيهَا الحِجَارَةَ

யூதர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் தம் சமுதாயத்தில் ஓர் ஆணும் பெண்ணும் விபச்சாரம் செய்துவிட்டதாகக் கூறினார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், நீங்கள் கல்லெறி தண்டனை குறித்து தவ்ராத்தில் என்ன காண்கிறீர்கள்? என்று கேட்டார்கள். அதற்கவர்கள், அவர்களை நாம் கேவலப்படுத்திட வேண்டும் என்றும், அவர்கள் கசையடி கொடுக்கப்படுவார்கள் என்றும் அதில் கூறப்பட்டுள்ளது என்று பதிலளித்தார்கள். உடனே (யூத மத அறிஞராயிருந்து இஸ்லாத்தை ஏற்ற) அப்துல்லாஹ் பின் ஸலாம் (ரலி) அவர்கள் நீங்கள் பொய் சொன்னீர்கள். (விபச்சாரம் செய்தவர்களை சாகும் வரை) கல்லால் அடிக்க வேண்டுமென்றுதான் அதில் கூறப்பட்டுள்ளது என்று சொன்னார்கள். உடனே, அவர்கள் தவ்ராத்தைக் கொண்டு வந்து அதை விரித்தார்கள். அவர்களில் ஒருவர் விபச்சாரிகளுக்கு கல்லெறிந்து கொல்லும்

தண்டனை தரப்பட வேண்டும்' என்று கூறும் வசனத்தின் மீது தனது கையை வைத்து மறைத்துக் கொண்டு, அதற்கு முன்பும் பின்பும் உள்ள வசனத்தை ஓதினார். அப்போது அப்துல்லாஹ் பின் ஸலாம் (ரலி) அவர்கள், உன் கையை எடு என்று சொல்ல, அவர் தனது கையை எடுத்தார். அப்போது அங்கே (விபச்சாரக் குற்றத்திற்கு) கல்லெறி தண்டனை தரும்படி கூறும் வசனம் இருந்தது. உடனே யூதர்கள், அப்துல்லாஹ் பின் ஸலாம் உண்மை சொன்னார். முஹம்மதே! தவ்ராத்தில் கல்லெறி தண்டனையைக் கூறும் வசனம் இருக்கத்தான் செய்கிறது என்று சொன்னார்கள். உடனே, அவ்விரண்டு பேரையும் சாகும் வரை கல்லால் அடிக்கும்படி நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் உத்திரவிட்டார்கள். அவ்வாறே அவ்விருவருக்கும் கல்லெறி தண்டனை வழங்கப்பட்டது. அப்போது அந்த ஆண், அப்பெண்ணைக் கல்லடியிலிருந்து பாதுகாப்பதற்காக தன் உடலை (அவளுக்குக் கேடயம் போலாக்கி) அவள் மீது கவிழ்ந்து (மறைத்துக்) கொள்வதை நான் பார்த்தேன்.

அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் உமர் (ரலி)

நூல் : புகாரி 3535

யூதர்கள் குற்றவியல் சட்டம் குறித்து தீர்ப்பு கேட்டு வந்த போது முஹம்மதே என்று அழைத்துள்ளார்கள். நபிகள் நாயகமோ, நபித்தோழர்களோ அதைக் கண்டிக்கவில்லை. அதை ஒரு பொருட்டாக எடுத்துக் கொள்ளாமல் அவர்கள் கேட்டு வந்த விஷயம் குறித்து தீர்ப்பளிக்கிறார்கள்.

இப்படி ஹஜரத் கிப்லாக்கள் ஏன் நடக்க முடியவில்லை? பிறமதச் சாமியார்களுக்கு அந்த மதத்து மக்கள் அளிக்கும் மரியாதையைப் போல் முஸ்லிம்கள் தமக்கு மரியாதை அளிக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பதே இதற்குக் காரணம்.

மற்றொரு சம்பவத்தைப் பாருங்கள்!

4811 - حَدَّثَنَا آدَمُ، حَدَّثَنَا شَيْبَانُ، عَنْ مَنْصُورٍ، عَنْ إِبْرَاهِيمَ، عَنْ عَبِيدَةَ، عَنْ عَبْدِ اللَّهِ رَضِيَ اللَّهُ عَنْهُ، قَالَ: جَاءَ حَبْرٌ مِنَ الأَحْبَارِ إِلَى رَسُولِ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ فَقَالَ: يَا مُحَمَّدُ إِنَّا نَجِدُ: أَنَّ اللَّهَ يَجْعَلُ السَّمَوَاتِ عَلَى إِصْبَعٍ وَالأَرَضِينَ عَلَى إِصْبَعٍ، وَالشَّجَرَ عَلَى إِصْبَعٍ، وَالمَاءَ وَالثَّرَى عَلَى إِصْبَعٍ، وَسَائِرَ الخَلاَئِقِ عَلَى إِصْبَعٍ، فَيَقُولُ أَنَا المَلِكُ، فَضَحِكَ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ حَتَّى بَدَتْ نَوَاجِذُهُ تَصْدِيقًا لِقَوْلِ الحَبْرِ، ثُمَّ قَرَأَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: {وَمَا قَدَرُوا اللَّهَ حَقَّ قَدْرِهِ، وَالأَرْضُ جَمِيعًا قَبْضَتُهُ يَوْمَ القِيَامَةِ، وَالسَّمَوَاتُ مَطْوِيَّاتٌ بِيَمِينِهِ، سُبْحَانَهُ وَتَعَالَى عَمَّا يُشْرِكُونَ}

யூத மத அறிஞர்களில் ஒருவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, முஹம்மதே! அல்லாஹ், வானங்களை ஒரு விரல் மீதும், பூமிகளை ஒரு விரல் மீதும், மரங்களை ஒரு விரல் மீதும், தண்ணீர் மற்றும் ஈரமான மண்ணை ஒரு விரல் மீதும், இதர படைப்பினங்களை ஒரு விரல் மீதும் வைத்துக் கொண்டு, நானே அரசன் என்று சொல்வான் என நாங்கள் (எங்களது வேத நூலான தவ்ராத்தில்) கண்டோம் என்று சொன்னார். இதைக் கேட்ட நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அந்த அறிஞரின் கருத்தை உண்மையென ஆமோதிக்கும் விதத்தில், தமது கடைவாய்ப் பற்கள் தெரியச் சிரித்தார்கள். பிறகு, அவர்கள் அல்லாஹ்வை எவ்வாறு மதிக்க வேண்டுமோ, அவ்வாறு மதிக்கவில்லை. மறுமை நாளில் பூமி முழுவதும் அவன் கைப் பிடியில் இருக்கும். வானங்கள் அவனது வலக்கரத்தில் சுருட்டப்பட்டிருக்கும். அவர்கள் இணை வைப்பவற்றிலிருந்து அவன் தூயவன்; உயர்ந்தவன் எனும் (39:67ஆவது) வசனத்தை ஓதினார்கள்.

அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் மஸ்வூத் (ரலி)

நூல் : புகாரி 4811

நபிகள் நாயகம் (ஸல்) காலத்தில் யூதர்கள் சிறுபான்மையினராக இருந்தனர். அவர்களின் மதகுரு வந்து முஹம்மதே என்று பெயர் சொல்லி அழைத்து கேள்வி கேட்கிறார். அல்லாஹ்வின் தூதர் என்பதை அவர் நம்பாதவராக இருந்தாலும் நபிகள் நாயகம் அவர்கள் சக்கரவர்த்தியாக இருந்ததால் ராஜாதி ராஜ முஹம்மதுவே என்று அடைமொழியைக் கூட அவர் பயன்படுத்தாமல் வெறும் பெயரைமட்டும் சொல்லி அழைக்க முடிந்தது எப்படி?

முஹம்மது அவர்களை யாரும் பெயர் சொல்லி அழைக்கலாம்; அது எந்த வகையிலும் அவர்களைப் பாதிக்காது என்று பரவலாக அறியப்பட்டு இருந்ததால் தான் இது சாத்தியமானது.

ஹஜரத் கிப்லாக்கள் அவர்களை விட மேலான மரியாதைக்கு உரியவர்களா? என்று சிந்தித்துப் பாருங்கள்!

2422 - حَدَّثَنَا قُتَيْبَةُ، حَدَّثَنَا اللَّيْثُ، عَنْ سَعِيدِ بْنِ أَبِي سَعِيدٍ، أَنَّهُ سَمِعَ أَبَا هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا، يَقُولُ: بَعَثَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ خَيْلًا قِبَلَ نَجْدٍ، فَجَاءَتْ بِرَجُلٍ مِنْ بَنِي حَنِيفَةَ يُقَالُ لَهُ ثُمَامَةُ بْنُ أُثَالٍ سَيِّدُ أَهْلِ اليَمَامَةِ، فَرَبَطُوهُ بِسَارِيَةٍ مِنْ سَوَارِي المَسْجِدِ، فَخَرَجَ إِلَيْهِ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ: «مَا عِنْدَكَ يَا ثُمَامَةُ»، قَالَ: عِنْدِي يَا مُحَمَّدُ خَيْرٌ، فَذَكَرَ الحَدِيثَ، قَالَ: «أَطْلِقُوا ثُمَامَةَ

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் நஜ்து மாநிலத்தை நோக்கி குதிரை வீரர்களின் படை ஒன்றை அனுப்பி வைத்தார்கள். அவர்கள் பனூ ஹனீஃபா குலத்தைச் சேர்ந்த யமாமாவாசிகளின் தலைவரான சுமாமா பின் உஸால் எனப்படும் மனிதரைப் பிடித்து வந்து அவரைப் பள்ளிவாசலின் தூணில் கட்டி வைத்தார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவரை நோக்கி வந்து, சுமாமாவே, உங்களிடம் என்ன (செய்தி) உள்ளது? என்று கேட்டார்கள். அவர், முஹம்மதே! என்னிடம் நல்ல செய்தி தான் உள்ளது என்று கூறினார். இறுதியில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், சுமாமாவை அவிழ்த்து விட்டு விடுங்கள் என்று உத்தரவிட்டார்கள்.

அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)

நூல் : புகாரி 2422

நபிகள் நாயகத்தால் சிறைப்பிடிக்கப்பட்ட கைதி ஒருவர் முஹம்மதே என்று அழைத்து பேச முடிகிறது. மன்னா! மன்னர் மன்னா என்பன போன்ற அடைமொழிகள் நபிகள் நாயகத்துக்கு அறவே பிடிக்காது என்பது பிற நாடுகளுக்கும் பரவி இருந்ததால் வெளிநாட்டில் இருந்து பிடித்து வரப்பட்ட அன்னிய பிரஜையும் முஹம்மதே என்று அழைக்க முடிந்தது.

ஹஜரத் கிப்லாக்கள் என்று பட்டம் சூட்டித் திரியும் மதகுருமார்கள் நபிகள் நாயகத்தை முன்மாதிரியாகக் கொள்ளவில்லை; பிற மதச் சாமியார்களைத் தான் முன்மாதிரிகளாகக் கொண்டுள்ளனர் என்பது இதிலிருந்து உறுதியாகிறது.

மக்களோடு மக்களாக நபிகள் நாயகம்

2899 و3373عن سلمة بن الأكوع قال مر النبي صلى الله عليه وسلم على نفر من أسلم ينتضلون فقال النبي صلى الله عليه وسلم ارموا بني إسماعيل فإن أباكم كان راميا ارموا وأنا مع بني فلان قال فأمسك أحد الفريقين بأيديهم فقال رسول الله صلى الله عليه وسلم ما لكم لا ترمون قالوا كيف نرمي وأنت معهم قال النبي صلى الله عليه وسلم ارموا فأنا معكم كلكم البخاري

பனூ அஸ்லம் குலத்தார் சிலர் அம்பெய்யும் போட்டியில் ஈடுபட்டிருந்த போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அவர்களைக் கடந்து சென்றார்கள். அப்போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், இஸ்மாயீலின் சந்ததிகளே! அம்பெய்யுங்கள். ஏனெனில், உங்கள் தந்தை (இஸ்மாயீல் அவர்கள்) அம்பெய்வதில் தேர்ச்சி பெற்றவராக இருந்தார்கள். நீங்கள் அம்பெய்யுங்கள். (போட்டியில்) நான் இன்ன குலத்தாருடன் இருக்கிறேன் என்று கூறினார்கள். உடனே, இரு பிரிவினரில் ஒரு சாரார் அம்பெய்வதை நிறுத்திக் கொண்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், உங்களுக்கென்ன ஆயிற்று? ஏன் அம்பெய்யாமலிருக்கிறீர்கள்? என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள், தாங்கள் அவர்களுடன் இருக்க, நாங்கள் எப்படி அம்பெய்வோம்? என்று சொன்னார்கள். உடனே நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், அப்படியானால் நான் உங்கள் அனைவருடனும் இருக்கின்றேன். நீங்கள் அம்பெய்யுங்கள் என்று கூறினார்கள்.

அறிவிப்பவர் : ஸலமா பின் அக்வவு (ரலி)

நூல் : புகாரி 2889, 3373

இரு கூட்டத்தினர் விளையாட்டுப் போட்டி நடத்தும் போது, விளையாட்டுப் பருவத்தைக் கடந்த வயதில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இருந்தும் அவர்களுடன் சேர்ந்து தாமும் அதில் பங்கெடுத்தது எதைக் காட்டுகிறது?

இறைத்தூதராக இருந்தாலும் மக்களோடு மக்களாக்க் கலந்து வாழ்வதில் எந்தக் குறையும் வைக்கக் கூடாது என்பதைத் தான் காட்டுகிறது.

ஹஜரத் கிப்லாக்களைக் கண்டால் விளையாட்டை நிறுத்தி விட வேண்டும் என்று மக்களை மூளைச்சலவை செய்து ஏமாற்றுவதை இதனுடன் ஒப்பிட்டுப்

பாருங்கள்! மார்க்கத்தை விட தங்களின் வெற்றுப் பெருமையே இவர்களுக்குப் பெரிதாகத் தெரிகிறது என்பதை அறியலாம்.

2837 و 3034 عن البراء قال رأيت رسول الله صلى الله عليه وسلم يوم الأحزاب ينقل التراب وقد وارى التراب بياض بطنه وهو يقول لولا أنت ما اهتدينا ولا تصدقنا ولا صلينا فأنزلن سكينة علينا وثبت الأقدام إن لاقينا إن الألى قد بغوا علينا إذا أرادوا فتنة أبينا البخاري

அகழ்ப் போரின் போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மண்ணைச் சுமந்து கொண்டு செல்வதை நான் பார்த்தேன். மண் அவர்களுடைய வயிற்றின் வெண்மையை மறைத்திருந்தது. அப்போது அவர்கள் இவ்வாறு (பாடிய வண்ணம்) கூறிக் கொண்டிருந்தார்கள்:

(இறைவா!) நீ இல்லாவிட்டால் நாங்கள் நேர்வழி அடைந்திருக்க மாட்டோம்; தருமம் செய்திருக்கவும் மாட்டோம்; தொழுதிருக்கவும் மாட்டோம். நாங்கள் பகைவர்களைச் சந்திக்கும் போது எங்கள் மீது அமைதியை இறக்கியருள்வாயாக! எங்கள் பாதங்களை உறுதிப்படுத்துவாயாக! இவர்கள் (எதிரிகள்) எங்கள் மீது அக்கிரமம் புரிந்து விட்டார்கள். இவர்கள் எங்களைச் சோதனையில் ஆழ்த்த விரும்பினால் அதற்கு நாங்கள் இடம் தர மாட்டோம்.

அறிவிப்பவர் : பரா பின் ஆஸிப் (ரலி)

நூல் : புகாரி 2837, 3034

எதிரிகள் படையெடுத்து வந்த போது மதீனாவைச் சுற்றி அகழ் தோண்டப்பட்டது. அப்பணியில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கட்டளையிடும் தலைவராக மட்டும் இராமல் மக்களோடு மக்களாக அகழ் வெட்டும் பணியிலும், மண் சுமக்கும் பணியிலும் ஈடுபட்டுள்ளார்கள்.

மக்களிடமிருந்து தம்மைத் தனித்துக் காட்டாமல் மக்களோடு மக்களாக்க் கலந்து பழகியுள்ளார்கள் என்பதை இது காட்டுகிறது.

எந்த ஹஜரத் கிப்லாவாவது சட்டையில் அழுக்குப்படும் வேலை செய்வதையோ, கடின உழைப்பு செய்வதையோ நீங்கள் பார்த்ததுண்டா? இவர்கள் நபிகள் நாயகத்தை முன்மாதிரியாகக் கொள்ளவில்லை என்பதையும் கிறித்தவ

பாதிரிமார்களையே முன்மாதிரியாகக் கொண்டுள்ளனர் என்பதையும் அறிந்து கொள்கிறோம்.

2322 عن سماك بن حرب قال قلت لجابر بن سمرة أكنت تجالس رسول الله صلى الله عليه وسلم قال نعم كثيرا كان لا يقوم من مصلاه الذي يصلي فيه الصبح حتى تطلع الشمس فإذا طلعت قام وكانوا يتحدثون فيأخذون في أمر الجاهلية فيضحكون ويتبسم صلى الله عليه وسلم صحيح مسلم

நீங்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களது சபையில் அமர்ந்ததுண்டா? என்று ஜாபிர் (ரலி) அவர்களிடம் நான் கேட்டேன். அதற்கவர்கள் ஆம் அதிகமாகவே அமர்ந்துள்ளேன். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சுப்ஹூத் தொழுததும் சூரியன் உதிக்கும் வரை தொழுத இடத்திலேயே அமர்ந்துவிட்டு சூரியன் உதித்த பின்னர் எழுவார்கள். அவர்கள் அமர்ந்திருக்கும் போது நபித்தோழர்கள் தமது அறியாமைக்கால செயல்களை நினைவு கூர்ந்து சிரிப்பார்கள். அதைக் கண்டு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் புன்னகை சிந்துவார்கள் என்று குறிப்பிட்டார்கள்.

அறிவிப்பவர் : ஜாபிர் (ரலி)

நூல் : முஸ்லிம் 2322

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அமர்ந்திருக்கும் சபையில் அவர்கள் முன்னிலையில் நபித்தோழர்கள் தமது கடந்த காலச் செயல்களை எண்ணிச் சிரிக்க முடிந்தது எப்படி? நபியவர்கள் அதைக் கேட்டு புன்னகைக்க முடிந்தது எப்படி?

இது ஒரேயொரு நாள் நடந்த நிகழ்வு அல்ல; நபிகள் நாயகத்தின் வழக்கமே இதுதான் என்று அனஸ் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள். இந்தத் தோழர்கள் நமக்கு முன்னால் அமர்ந்து சிரிக்கிறார்களே என்று கருதி நபியவர்கள் அதைக் கண்டித்து இருக்கலாம். அல்லது புன்னகை செய்யாமல் இலேசாக முகத்தில் வெறுப்பைக் காட்டினால் கூட நபித்தோழர்கள் கதை பேசிச் சிரிப்பதை கைவிட்டிருப்பார்கள். அல்லது தொழுதவுடன் அந்தச் சபையில் அமராமல் எழுந்து போய் இருக்கலாம். இதில் எந்த ஒன்றையும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் செய்யவில்லை.

மக்களில் இருந்து அப்பாற்பட்டவர்களாக நபியவர்கள் தன்னைக் கருதியதில்லை. மக்களுக்கும் இதை அவர்கள் தெளிவாக அறிவித்து இருந்ததால் தான் தமக்குச் சமமான நண்பர்கள் மத்தியில் நடப்பது போல் நபித்தோழர்களால் நடக்க முடிந்தது.

சிறுவர்களுடன் கூட நபிகள் நாயகம் (ஸல்) சக மனிதனாக மதித்துப் பழகி உள்ளனர் என்பதைப் பின்வரும் ஹதீஸில் இருந்து அறியலாம்.

6129 - حَدَّثَنَا آدَمُ، حَدَّثَنَا شُعْبَةُ، حَدَّثَنَا أَبُو التَّيَّاحِ، قَالَ: سَمِعْتُ أَنَسَ بْنَ مَالِكٍ رَضِيَ اللَّهُ عَنْهُ، يَقُولُ: إِنْ كَانَ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ لَيُخَالِطُنَا، حَتَّى يَقُولَ لِأَخٍ لِي صَغِيرٍ: يَا أَبَا عُمَيْرٍ، مَا فَعَلَ النُّغَيْرُ

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் எங்களுடன் கலந்து பழகுவார்கள். எந்த அளவிற்கென்றால், சிறுவனாக இருந்த என் தம்பியிடம் அபூஉமைரே! பாடும் உனது சின்னக் குருவி (புள்புள்) என்ன ஆயிற்று? என்று கூடக் கேட்பார்கள்.

அறிவிப்பவர் : அனஸ் (ரலி)

நூல் : புகாரி 6129

எப்போதும் வளர்ப்புப் பறவையுடன் காட்சி தரும் சிறுவனிடம் அப்பறவை இல்லாமல் இருப்பதைக் கண்டு அதைப் பற்றியும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அன்பாக விசாரித்துள்ளார்கள். இப்படி மக்களுடன் சகஜமாகப் பழகும் ஒரு ஹஜரத் கிப்லாவைக் கூட காண முடியவில்லை. மக்களால் நெருங்க முடியாத உயரத்தில் இருப்பதாக தம்மைப் பற்றி கர்வம் கொண்டவர்களாகவே உள்ளனர். இது சரிதானா?

407 - حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ يُوسُفَ، قَالَ: أَخْبَرَنَا مَالِكٌ، عَنْ هِشَامِ بْنِ عُرْوَةَ، عَنْ أَبِيهِ، عَنْ عَائِشَةَ أُمِّ المُؤْمِنِينَ: أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ «رَأَى فِي جِدَارِ القِبْلَةِ مُخَاطًا أَوْ بُصَاقًا أَوْ نُخَامَةً، فَحَكَّهُ»

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (பள்ளி வாசலின்) கிப்லாத் திசையிலுள்ள சுவரில் மூக்குச் சளியை' அல்லது எச்சிலை' அல்லது காறல் சளியை'க் கண்டார்கள். உடனே அதைச் சுரண்டி (சுத்தப்படுத்தி) விட்டார்கள்.

அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)

நூல் : புகாரி 407

பள்ளிவாசல் சுவற்றில் யாரோ எச்சிலைத் துப்பி இருந்தால் அதை அப்புறப்படுத்துமாறு நபித்தோழர்களுக்கு அவர்கள் கட்டளையிட்டிருக்கலாம். அப்படிச் செய்யாமல் அதைத் தாமே செய்துள்ளார்கள் என்றால் இதை ஒரு ஹஜரத் கிப்லாவாவது முன்மாதிரியாகக் கொண்டு நீங்கள் பார்த்ததுண்டா?

2351 - حَدَّثَنَا سَعِيدُ بْنُ أَبِي مَرْيَمَ، حَدَّثَنَا أَبُو غَسَّانَ، قَالَ: حَدَّثَنِي أَبُو حَازِمٍ، عَنْ سَهْلِ بْنِ سَعْدٍ رَضِيَ اللَّهُ عَنْهُ، قَالَ: أُتِيَ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ بِقَدَحٍ، فَشَرِبَ مِنْهُ، وَعَنْ يَمِينِهِ غُلاَمٌ أَصْغَرُ القَوْمِ، وَالأَشْيَاخُ عَنْ يَسَارِهِ، فَقَالَ: «يَا غُلاَمُ أَتَأْذَنُ لِي أَنْ أُعْطِيَهُ الأَشْيَاخَ»، قَالَ: مَا كُنْتُ لِأُوثِرَ بِفَضْلِي مِنْكَ أَحَدًا يَا رَسُولَ اللَّهِ، فَأَعْطَاهُ إِيَّاهُ- 2366, 2451, 2602, 5620

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் ஒரு பாத்திரம் கொண்டு வரப்பட்டது. அதிலிருந்து அவர்கள் குடித்தார்கள். அப்போது அவர்களுடைய வலப் பக்கம் மக்களில் மிகக் குறைந்த வயதுடைய சிறுவர் ஒருவரும், இடப் பக்கம் வயது முதிர்ந்தவர்களும் இருந்தனர். ஆகவே, நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் (அச்சிறுவரை நோக்கி), சிறுவனே! நான் இதை முதியவர்களுக்குக் கொடுத்துவிட எனக்கு நீ அனுமதியளிக்கிறாயா? என்று கேட்டார்கள். அதற்கு அச்சிறுவர், அல்லாஹ்வின் தூதரே! தங்களிடமிருந்து எனக்குக் கிடைக்கக் கூடிய மீதத்தை எவருக்கும் நான் விட்டுக் கொடுக்க மாட்டேன் என்று கூறினார். ஆகவே, நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், தாம் மீதம் வைத்ததை அந்தச் சிறுவருக்கே கொடுத்து விட்டார்கள்.

அறிவிப்பவர் : ஸஹ்ல் பின் ஸஅது (ரலி)

நூல் : புகாரி 2351

2352 - حَدَّثَنَا أَبُو اليَمَانِ، أَخْبَرَنَا شُعَيْبٌ، عَنِ الزُّهْرِيِّ، قَالَ: حَدَّثَنِي أَنَسُ بْنُ مَالِكٍ رَضِيَ اللَّهُ عَنْهُ: أَنَّهَا حُلِبَتْ لِرَسُولِ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ شَاةٌ دَاجِنٌ، وَهِيَ فِي دَارِ أَنَسِ بْنِ مَالِكٍ، وَشِيبَ لَبَنُهَا بِمَاءٍ مِنَ البِئْرِ الَّتِي فِي دَارِ أَنَسٍ، فَأَعْطَى رَسُولَ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ القَدَحَ، فَشَرِبَ مِنْهُ حَتَّى إِذَا نَزَعَ القَدَحَ مِنْ فِيهِ، وَعَلَى يَسَارِهِ أَبُو بَكْرٍ، وَعَنْ يَمِينِهِ أَعْرَابِيٌّ، فَقَالَ عُمَرُ: وَخَافَ أَنْ يُعْطِيَهُ الأَعْرَابِيَّ، أَعْطِ أَبَا بَكْرٍ يَا رَسُولَ اللَّهِ عِنْدَكَ، فَأَعْطَاهُ الأَعْرَابِيَّ الَّذِي عَلَى يَمِينِهِ، ثُمَّ قَالَ: «الأَيْمَنَ فَالأَيْمَنَ»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் என் வீட்டில் இருந்தபோது வளர்ப்பு ஆட்டின் பாலை அவர்களுக்காகக் கறந்து, என் வீட்டில் இருந்த கிணற்றின் தண்ணீரை அதில் கலந்து, அந்தப் பால் பாத்திரத்தை நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு நான் கொடுத்தேன். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அதிலிருந்து அருந்தி விட்டு, தம்

வாயிலிருந்து அந்தப் பாத்திரத்தை எடுத்தார்கள். (அப்போது) அவர்களின் வலப் பக்கத்தில் அபூபக்ர் (ரலி) அவர்களும், இடப் பக்கத்தில் ஒரு கிராமவாசியும் இருந்தனர். ஆகவே, உமர் (ரலி) அவர்கள், நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் எங்கே மீதிப் பாலை அந்தக் கிராமவாசிக்குக் கொடுத்து விடுவார்களோ என்று அஞ்சி, உங்களிடம் இருப்பதை அபூபக்ருக்குக் கொடுங்கள் அல்லாஹ்வின் தூதரே! என்று கூறினார்கள். ஆனால், நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அதைத் தமது வலப் பக்கம் இருந்த கிராமவாசிக்கே கொடுத்து விட்டு, (முதலில்) வலப் பக்கம் இருப்பவரிடமே கொடுக்க வேண்டும். வலப் பக்கமிருப்பவரே அதிக உரிமையுடையவர் என்று சொன்னார்கள்.

அறிவிப்பவர் : அனஸ் பின் மாலிக் (ரலி)

நூல் : புகாரி 2352

நபிகள் நாயகத்துக்கு இடது புறத்தில் நபிகள் நாயகத்தின் உயிர்த் தோழர் அபூபக்ர் (ரலி) இருக்கிறார். வலது புறத்திலோ யாரெனத் தெரியாத கிராமவாசி இருக்கிறார். நபிகள் நாயகத்தின் அருகில் அமரத் தக்கவர்கள் என்ற தர வரிசை ஏதும் நபிகள் நாயகத்தால் வகுக்கப்படவில்லை. யார் முதலில் வருகிறார்களோ அவர்கள் நபிகள் நாயகத்தின் அருகில் அமரலாம். எவ்வளவு சாதாரணமானவராக அவர் இருந்தாலும் பிரச்சினையில்லை என்பது தான் அவர்கள் ஏற்படுத்திய நடைமுறை.

நீ அனுமதி தந்தால் பெரியவர்களுக்குக் கொடுக்கிறேன். நீ அனுமதி தராவிட்டால் அவ்வாறு செய்ய மாட்டேன் என்று வேண்டுகிறார்கள். அவர் விட்டுத் தர விரும்பவில்லை என்ற போது இந்த அற்பமான விஷயத்திலும் அவரது முன்னுரிமையை நிலை நாட்டுகிறார்கள்.

சாதாரண மனிதருக்குக் கூட அவரது உரிமையையும், மரியாதையையும் நபிகள் நாயகம் (ஸல்) வழங்குகிறார்கள்.

ஆனால் பணக்காரர்களுக்கும், முத்தவல்லிகளுக்கும் பல்லக்கு தூக்கி சட்டத்தை வளைக்கும் ஹஜரத் கிப்லாக்கள் இந்த விஷயத்திலும் நபியை முன்மாதிரியாகக் கொள்ளவில்லை.

458 - حَدَّثَنَا سُلَيْمَانُ بْنُ حَرْبٍ، قَالَ: حَدَّثَنَا حَمَّادُ بْنُ زَيْدٍ، عَنْ ثَابِتٍ، عَنْ أَبِي رَافِعٍ، عَنْ أَبِي هُرَيْرَةَ: أَنَّ رَجُلًا أَسْوَدَ أَوِ امْرَأَةً سَوْدَاءَ كَانَ يَقُمُّ المَسْجِدَ فَمَاتَ، فَسَأَلَ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ عَنْهُ، فَقَالُوا: مَاتَ، قَالَ: «أَفَلاَ كُنْتُمْ آذَنْتُمُونِي بِهِ دُلُّونِي عَلَى قَبْرِهِ - أَوْ قَالَ قَبْرِهَا - فَأَتَى قَبْرَهَا فَصَلَّى عَلَيْهَا»

(மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலைப் பெருக்குபவராக இருந்த ஒரு கறுப்பு ஆண்' அல்லது ஒரு கறுப்புப் பெண்' இறந்துவிட்டார். ஆகவே அவரைப் பற்றி (ஒரு நாள்) நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் விசாரித்தார்கள். அப்போது மக்கள், அவர் இறந்துவிட்டார் எனக் கூறினார்கள். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், அது பற்றி (முன்பே) என்னிடம் நீங்கள் அறிவித்திருக்கக் கூடாதா? அவருடைய அடக்கத்தலத்தை எனக்குக் காட்டுங்கள் என்று கூறிவிட்டு அவரது அடக்கத்தலத்திற்குச் சென்று அவருக்காக ஜனாஸா தொழுகை தொழுதார்கள்.

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி)

நூல் : புகாரி 458

பள்ளிவாசலில் கூட்டிப் பெருக்கும் வேலை செய்த பணிப்பெண்ணுக்கும் மற்றவர்களுக்கு வழங்கும் மரியாதையை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் வழங்குகிறார்கள். சில நாட்களாக அவரைக் காணவில்லை என்றவுடன் அக்கரையுடன் விசாரிக்கிறார்கள். அவர் மரணித்தது தெரிவிக்கப்பட்டவுடன் அவர் அடக்கம் செய்யப்பட்ட இட்த்துக்குச் சென்று அந்த இடத்தில் அவருக்காக ஜனாஸா தொழுகை நடத்துகிறார்கள்.

எல்லா மனிதர்களுடனும் சகஜமாக நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பழகி வந்தார்கள் என்பதற்கு இது ஆதாரமாக உள்ளது.

2097 - حَدَّثَنَا مُحَمَّدُ بْنُ بَشَّارٍ، حَدَّثَنَا عَبْدُ الوَهَّابِ، حَدَّثَنَا عُبَيْدُ اللَّهِ، عَنْ وَهْبِ بْنِ كَيْسَانَ، عَنْ جَابِرِ بْنِ عَبْدِ اللَّهِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا، قَالَ: كُنْتُ مَعَ النَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ فِي غَزَاةٍ، فَأَبْطَأَ بِي جَمَلِي وَأَعْيَا، فَأَتَى عَلَيَّ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ فَقَالَ «جَابِرٌ»: فَقُلْتُ: نَعَمْ، قَالَ: «مَا شَأْنُكَ؟» قُلْتُ: أَبْطَأَ عَلَيَّ جَمَلِي وَأَعْيَا، فَتَخَلَّفْتُ، فَنَزَلَ يَحْجُنُهُ بِمِحْجَنِهِ ثُمَّ قَالَ: «ارْكَبْ»، فَرَكِبْتُ، فَلَقَدْ رَأَيْتُهُ أَكُفُّهُ عَنْ رَسُولِ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، قَالَ: «تَزَوَّجْتَ» قُلْتُ: نَعَمْ، قَالَ: «بِكْرًا أَمْ ثَيِّبًا» قُلْتُ: بَلْ ثَيِّبًا، قَالَ: «أَفَلاَ جَارِيَةً تُلاَعِبُهَا وَتُلاَعِبُكَ» قُلْتُ: إِنَّ لِي أَخَوَاتٍ، فَأَحْبَبْتُ أَنْ أَتَزَوَّجَ امْرَأَةً تَجْمَعُهُنَّ، وَتَمْشُطُهُنَّ، وَتَقُومُ عَلَيْهِنَّ، قَالَ: «أَمَّا إِنَّكَ قَادِمٌ، فَإِذَا قَدِمْتَ، فَالكَيْسَ الكَيْسَ»، ثُمَّ قَالَ: «أَتَبِيعُ جَمَلَكَ» قُلْتُ: نَعَمْ، فَاشْتَرَاهُ مِنِّي بِأُوقِيَّةٍ، ثُمَّ قَدِمَ رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ قَبْلِي، وَقَدِمْتُ بِالْغَدَاةِ، فَجِئْنَا إِلَى المَسْجِدِ فَوَجَدْتُهُ عَلَى بَابِ المَسْجِدِ، قَالَ: «آلْآنَ قَدِمْتَ» قُلْتُ: نَعَمْ، قَالَ: «فَدَعْ جَمَلَكَ، فَادْخُلْ، فَصَلِّ رَكْعَتَيْنِ»، فَدَخَلْتُ فَصَلَّيْتُ، فَأَمَرَ بِلاَلًا أَنْ يَزِنَ لَهُ أُوقِيَّةً، فَوَزَنَ لِي بِلاَلٌ، فَأَرْجَحَ لِي فِي المِيزَانِ، فَانْطَلَقْتُ حَتَّى وَلَّيْتُ، فَقَالَ: «ادْعُ لِي جَابِرًا» قُلْتُ: الآنَ يَرُدُّ عَلَيَّ الجَمَلَ، وَلَمْ يَكُنْ شَيْءٌ أَبْغَضَ إِلَيَّ مِنْهُ، قَالَ: «خُذْ جَمَلَكَ وَلَكَ ثَمَنُهُ»

நான் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுடன் ஒரு போரில் இருந்தேன்; அப்போது எனது ஒட்டகம் களைத்து பலமிழந்து போனதால் என்னைப் பின்தங்க வைத்துவிட்டது. நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் என்னிடம் வந்து, ஜாபிரா? என்று கேட்டார்கள். நான், ஆம்! என்றேன். என்ன விஷயம் (ஏன் பின்தங்கிவிட்டீர்)? என்று கேட்டார்கள். என் ஒட்டகம் களைத்து பலமிழந்து போனதால் என்னைப் பின்தங்க வைத்துவிட்டது; அதனால் நான் பின்தங்கி விட்டேன்! என்றேன். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கீழே இறங்கி தலைப் பகுதி வளைந்த ஒரு கைத்தடியால் எனது ஒட்டகத்தைத் தட்டி(எழுப்பி)னார்கள். பிறகு (உமது வாகனத்தில்) ஏறுவீராக! என்றனர். நான் (வாகனத்தில்) ஏறினேன். நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை விட எனது ஒட்டகம் முந்தாதவாறு அதைக் கட்டுப்படுத்தினேன். அப்போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், நீர் மணமுடித்து விட்டீரா? என்று கேட்டார்கள். நான் ஆம்! என்றேன். கன்னியையா? விதவையையா? என்று கேட்டார்கள். விதவையைத்தான்! என்று நான் கூறினேன். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், கன்னிப் பெண்ணை மணந்திருக்கக் கூடாதா? அவள் உம்முடனும் நீர் அவளுடனும் கூடிக்குலாவி மகிழலாமே! என்று கூறினார்கள். நான், எனக்குச் (சிறிய வயதுடைய) சகோதரிகள் உள்ளனர்! அவர்களை அரவணைத்து, அவர்களுக்குத் தலைவாரி, அவர்களைப் பராமரிக்கக் கூடிய ஒரு பெண்ணை மணக்க வேண்டும் என்று விரும்பினேன்! என்றேன். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், இப்போது ஊருக்கு செல்லப் போகிறீர்! ஊர் சென்றதும் நிதானத்துடன் நடந்து கொள்வீராக! நிதானத்துடன்

நடந்துகொள்வீராக! என்று கூறிவிட்டு பின்னர், உமது ஒட்டகத்தை எனக்கு விற்று விடுகிறீரா? என்று கேட்டார்கள். நான், சரி (விற்று விடுகிறேன்!) என்றேன். அவர்கள் என்னிடமிருந்து, ஒரு ஊக்கியா எடை (தங்கத்து)க்குப் பகரமாக அதை வாங்கிக் கொண்டார்கள். பிறகு, எனக்கு முன்பே நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் (மதீனாவுக்கு) சென்று விட்டார்கள். நான் மறுநாள் சென்றடைந்தேன். நாங்கள் பள்ளிவாசலுக்கு வந்த போது அதன் நுழைவாயிலில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் நின்று கொண்டிருந்தார்கள். இப்போது தான் வருகிறீரா? என்று அவர்கள் (என்னைப் பார்த்துக்) கேட்டார்கள். நான் ஆம்! என்றேன். உமது ஒட்டகத்தை விட்டுவிட்டு உள்ளே சென்று இரண்டு ரக்அத்கள் தொழுவீராக! என்று சொன்னார்கள். அவ்வாறே, நான் உள்ளே சென்று தொழுதேன். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் எனக்காக ஒரு ஊக்கியா (தங்கத்தை) எடை போடுமாறு பிலால் (ரலி) அவர்களுக்கு உத்தரவிட்டார்கள். எனக்காக பிலால் (ரலி) அவர்கள் எடை போட்டுச்சற்று தாராளமாகவே நிறுத்தார்கள். பிறகு நான் திரும்பிச்சென்று விட்டேன். அப்போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், ஜாபிரை என்னிடம் அழைத்து வாரும்! என்றனர். நான் (மனத்திற்குள்) இப்போது என் ஒட்டகம் திருப்பித் தரப்பட்டுவிடும்; அதைவிட எனக்கு வெறுப்பானது வேறொன்றுமில்லை என்று கூறிக் கொண்டேன். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், உமது ஒட்டகத்தை எடுத்துக் கொள்வீராக! அதனுடைய விலையையும் நீரே வைத்துக் கொள்வீராக! என்று சொன்னார்கள்.

அறிவிப்பவர் : ஜாபிர் பின் அப்துல்லாஹ் (ரலி)

நூல் : புகாரி 2097

ஜாபிர் என்பவர் முக்கியமான பிரமுகர் அல்ல. ஒரு இளைஞர். அவரது ஒட்டகம் சண்டித்தனம் செய்து உட்கார்ந்து விட்டதைக் கவனித்த நபிகள் நாயகம் (ஸல்) யாரையாவது அனுப்பி அவருக்கு உதவுமாறு கூறியிருக்கலாம். அவ்வாறு செய்யாமல் அவரை நோக்கி தாமே வருகிறார்கள்.

வந்தவுடன் ஜாபிரா? என்று கேட்கிறார்கள். சாதாரணமானவரையும் பெயர் சொல்லிக் கூப்பிடும் அளவுக்கும், பெயரைத் தெரிந்து வைத்திருக்கும்

அளவுக்கும் அவர்கள் மக்களுடன் நெருங்கிப் பழகி வந்தார்கள் என்பது தெரிகிறது.

தமது ஒட்டகத்திலிருந்து இறங்கி அவரது ஒட்டகத்தை எழுப்பி விடுகிறார்கள். எழுப்பி விட்டது மட்டுமின்றி அவருடைய பொருளாதார நிலை, குடும்ப நிலவரம் ஆகிய அனைத்தையும் சாவகாசமாக விசாரிக்கிறார்கள்.

அவரது ஒட்டகம் எதற்கும் உதவாத ஒட்டகம் என்பதை அறிந்து கொண்டு அவர் வேறு தரமான ஒட்டகத்தை வாங்குவதற்காக அதை விலைக்குக் கேட்கிறார்கள்.

அவர் மற்றவர்களுடன் சேரும் வரை கூடவே வந்து விட்டு அதன் பின்னர் வேகமாக அவர்கள் புறப்படுகிறார்கள்.

ஊர் சென்றதும் தாம் கொடுத்த வாக்குப் படி ஒட்டகத்திற்குரிய விலையைக் கொடுப்பதற்காக இவரை எதிர்பார்த்துக் காத்திருக்கிறார்கள். தாம் சொன்ன படி அதற்கான விலையையும் கொடுத்து விட்டு அந்த ஒட்டகத்தையும் அவரிடம் கொடுத்து விடுகிறார்கள்.

இப்படி மக்களோடு மக்களாக சகஜமாக ஹஜ்ரத் கிப்லாக்கள் நடக்கிறார்களா? மக்களுக்கும் தமக்கும் மிகப்பெரிய இடைவெளி இருப்பதாகக் காட்டிக் கொள்கிறார்களா என்று சிந்தித்துப் பாருங்கள்!

5664 - حَدَّثَنَا عَمْرُو بْنُ عَبَّاسٍ، حَدَّثَنَا عَبْدُ الرَّحْمَنِ، حَدَّثَنَا سُفْيَانُ، عَنْ مُحَمَّدٍ هُوَ ابْنُ المُنْكَدِرِ، عَنْ جَابِرٍ رَضِيَ اللَّهُ عَنْهُ، قَالَ: «جَاءَنِي النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ يَعُودُنِي، لَيْسَ بِرَاكِبِ بَغْلٍ وَلاَ بِرْذَوْنٍ»

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் (நான் நேயுற்றிருந்த போது) என்னை உடல் நலம் விசாரிக்க வந்தார்கள். அப்போது அவர்கள் கோவேறு கழுதையின் மீது பயணம் செய்தபடியும் வரவில்லை; குதிரையின் மீது பயணம் செய்தபடியும் வரவில்லை. (மாறாக, நடந்தே வந்தார்கள்.)

அறிவிப்பவர் : ஜாபிர் (ரலி)

நூல் : புகாரி 5664

பெரிய அளவுக்கு அறிமுகமில்லாத இளைஞரான ஜாபிர் (ரலி) உடல் நலம் பாதிக்கப்பட்ட போது வீடு தேடி நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் நோய் விசாரிக்கச் சென்றுள்ளார்கள். பெரிய பிரமுகர்களும், சாதாரணமானவர்களும் அவர்களைப் பொருத்தவரை சமமாகவே நடத்தினார்கள் என்பதற்கு இவை சான்றுகளாக உள்ளன.

இன்றைய ஹஜரது கிப்லாக்கள் முன்னால் பொதுமக்களோ, அவர்களிடம் பயிலும் மாணவர்களோ இப்படியெல்லாம் நடக்க முடிகிறதா?

ஹஜரத் கிப்லாக்களின் கோபப்பார்வைக்கு ஆளானால் தொலைந்தீர்கள் என்று மக்களைப் பயமுறுத்தி வைத்துள்ளதால் அனைவரும் ஹஜரத் கிப்லாக்கள் எதிர்பார்க்கும் போலி மரியாதையை வழங்கி வருகின்றனர்.

இந்த விஷயத்தில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் நடந்து கொண்டது எப்படி என்று பாருங்கள்!

## சபிக்காத நபிகள் நாயகம்

ஹஜரத் கிப்லாக்களால் நமக்கு நன்மை செய்ய முடிகிறதோ, இல்லையோ அவர்களைப் பகைத்துக் கொண்டால் நமக்குத் தீமை ஏற்படும் என்ற தோற்றத்தை ஏற்படுத்தியுள்ளனர்.

ஹஜரத் கிப்லாவாக இருந்தாலும் சாதாரண மனிதனாக இருந்தாலும் அவர்களுக்கு நாம் ஏதாவது அநீதி இழைத்தால் தான் அவர்களின் சாபத்துக்கு அஞ்ச வேண்டும். அநீதியிழைக்கப்பட்டவனுக்கும், அல்லாஹ்வுக்கும் இடையே திரை இல்லை என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியுள்ளனர்.

ஆனால் ஹஜ்ரத் கிப்லாக்கள் நமக்கு அநீதி இழைத்து வழிகெடுத்துள்ளதால் அவர்களின் சாபத்தால் எதுவும் நிகழாது என்பதே உண்மை.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் என்பதால் அவர்கள் சாபமிட்டு பிரார்த்தனை செய்தால் அது அல்லாஹ்வால் நிறைவேற்றப்பட் அதிகத் தகுதி உள்ளது.

அப்படி இருந்தும் அவர்கள் மக்களிடம் எப்படி நடந்து கொண்டார்கள்? என் சாபத்துக்கு அஞ்சாதீர்கள் என்று மக்களுக்கு எப்படி தெளிவுபடுத்தியுள்ளனர் என்று பாருங்கள்!

6779 - حَدَّثَنَا زُهَيْرُ بْنُ حَرْبٍ حَدَّثَنَا جَرِيرٌ عَنِ الأَعْمَشِ عَنْ أَبِى الضُّحَى عَنْ مَسْرُوقٍ عَنْ عَائِشَةَ قَالَتْ دَخَلَ عَلَى رَسُولِ اللَّهِ -صلى الله عليه وسلم- رَجُلاَنِ فَكَلَّمَاهُ بِشَىْءٍ لاَ أَدْرِى مَا هُوَ فَأَغْضَبَاهُ فَلَعَنَهُمَا وَسَبَّهُمَا فَلَمَّا خَرَجَا قُلْتُ يَا رَسُولَ اللَّهِ مَنْ أَصَابَ مِنَ الْخَيْرِ شَيْئًا مَا أَصَابَهُ هَذَانِ قَالَ « وَمَا ذَاكِ ».قَالَتْ قُلْتُ لَعَنْتَهُمَا وَسَبَبْتَهُمَا قَالَ « أَوَمَا عَلِمْتِ مَا شَارَطْتُ عَلَيْهِ رَبِّى قُلْتُ اللَّهُمَّ إِنَّمَا أَنَا بَشَرٌ فَأَىُّ الْمُسْلِمِينَ لَعَنْتُهُ أَوْ سَبَبْتُهُ فَاجْعَلْهُ لَهُ زَكَاةً وَأَجْرًا ».

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் இரண்டு மனிதர்கள் வந்து எதையோ பேசினார்கள். என்னவென்று எனக்குத் தெரியவில்லை, அவர்களின் பேச்சு நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்குக் கோபத்தை ஏற்படுத்தியது. உடனே அவ்விருவரையும் ஏசியதுடன் சபிக்கவும் செய்தார்கள். அவ்விருவரும் சென்ற பின் இவ்விருவருக்கும் கிடைத்த நன்மையை வேறு யார் அடைவார் என்று நான் கூறினேன். நீ என்ன சொல்கிறாய்? என்று நபிகள் நாயகம் (ஸல்) கேட்டார்கள். 'அவ்விருவரையும் திட்டிச் சபித்தீர்களே' என்று நான் கூறினேன். 'ஆம்! நானும் ஒரு மனிதனே. எனவே நான் யாரையாவது திட்டினாலோ, சபித்தாலோ அதை அவருக்கு அருளாக ஆக்கி விடு என்று என் இறைவனிடம் நான் உறுதிமொழி பெற்றுள்ளேன்' என்று கூறினார்கள்.

அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)

நூல் : முஸ்லிம் 4705

6361 - حَدَّثَنَا أَحْمَدُ بْنُ صَالِحٍ، حَدَّثَنَا ابْنُ وَهْبٍ، قَالَ: أَخْبَرَنِي يُونُسُ، عَنِ ابْنِ شِهَابٍ، قَالَ: أَخْبَرَنِي سَعِيدُ بْنُ المُسَيِّبِ، عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ: أَنَّهُ سَمِعَ النَّبِيَّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ يَقُولُ: «اللَّهُمَّ فَأَيُّمَا مُؤْمِنٍ سَبَبْتُهُ، فَاجْعَلْ ذَلِكَ لَهُ قُرْبَةً إِلَيْكَ يَوْمَ القِيَامَةِ»

'இறைவா! நம்பிக்கையாளர் எவரையேனும் நான் ஏசினால் மறுமையில் உன்னிடம் அவர் நெருங்குவதற்குக் காரணமாக அதை ஆக்கி விடு!' என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பிரார்த்தனை செய்ததை நான் செவியுற்றுள்ளேன்.

அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரலி)

நூல் : புகாரி: 6361

என் சாபத்திற்கு யாரும் பயப்பட வேண்டாம் என்று கூறியது மட்டுமின்றி நான் கோபத்தில் யாரையாவது சபித்தால் அது அவருக்கு நன்மையாகத் தான் முடியும் எனவும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியிருக்க, ஹஜ்ரத் கிப்லாக்கள் எப்படி நடக்கிறார்கள்? தாங்கள் சொல்வதைக் கேட்டு ஆடுபவனைப் போல் அல்லாஹ்வைப் பற்றி நினைக்கிறார்கள். இதன் காரணமாகவே பத்துவா செய்திடுவேன் என்று மக்களை அச்சுறுத்துகின்றனர்

## எழுந்து நிற்பதையும் தடுத்த நபிகள் நாயகம்

தங்களைக் கண்டவுடன் மக்களும், மாணவர்களும் எழுந்து நிற்க வேண்டும் என்று ஹஜ்ரத் கிப்லாக்கள் எதிர்பார்க்கிறார்கள். இப்படித்தான் ஹஜரத்துகளுக்கு மரியாதை செய்ய வேண்டும் என்று மக்களை இவர்கள் வழிகெடுத்து இருப்பதால் மக்களும் எழுந்து நிற்கிறார்கள்.

இவர்கள் நபிகள் நாயகத்தை முன்மாதிரியாகக் கொண்டு இருந்தால் இப்படிச் செய்யக் கூடாது என்று மக்களுக்குப் போதித்து தடுத்து இருப்பார்கள். அரசியல்வாதிகளையும், பிற மத சாமியார்களையும் இவர்கள் முன்மாதிரியாகக் கொண்டதால் தான் தமக்காக மக்கள் எழுந்து நிற்க வேண்டும் என்று விரும்புகின்றனர்.

இதோ நபிகள் நாயகத்தின் வழிகாட்டுதலைப் பாருங்கள்!

2678 عن أنس قال لم يكن شخص أحب إليهم من رسول الله صلى الله عليه وسلم قال وكانوا إذا رأوه لم يقوموا لما يعلمون من كراهيته لذلك قال أبو عيسى هذا حديث حسن صحيح غريب من هذا الوجه الترمذي

நபித்தோழர்களுக்கு நபிகள் நாயகத்தைவிட யாரும் விருப்பமானவர்களாக இருந்ததில்லை. அப்படி இருந்தும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை நபித்தோழர்கள் கண்டால் எழுந்து நிற்க மாட்டார்கள். இதை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் வெறுப்பார்கள் என்று அவர்கள் அறிந்து வைத்திருந்ததே காரணம்.

அறிவிப்பவர் : அனஸ் (ரலி)

நூல்கள் : திர்மிதி, அஹ்மத்

ஹஜ்ரத் கிப்லாக்களை அவர்களின் சீடர்கள் நேசிப்பதை விட பண்மடங்கு நபித்தோழர்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை அதிகம் நேசித்தார்கள். அதிகம் மதித்தார்கள். ஆனாலும் அவர்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைக் கண்டால் எழுந்து நிற்க மாட்டார்கள் என்றால் இந்த ஹஜரத் கிப்லாக்கள் அவர்களை விட மேலான மரியாதைக்கு உரியவர்களா?

இதை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் வெறுப்பார்கள் என்று நபித்தோழர்கள் அறிந்து வைத்திருந்ததே காரணம் என்று அனஸ் (ரலி) அவர்கள் கூறுவது கவனிக்கத்தக்கது.

மக்களே! நாங்கள் வரும்போது நீங்கள் எழுந்து நிற்பது நபிவழிக்கு எதிரானது என்று மார்க்க அறிஞர்கள் விளக்கியிருக்க வேண்டாமா? நீங்கள் எழுந்து நிற்பது எங்களுக்கு அறவே பிடிக்காது என்று மக்களுக்குப் புரியவைத்திருக்க வேண்டாமா?

அப்படிச் செய்யாமல் அதை ஊக்குவிப்பவர்களாகவும், அதில் மகிழ்ச்சி அடைபவர்களாகவுமே உள்ளனர்.

5229 - حدثنا موسى بن إسماعيل ثنا حماد عن حبيب بن الشهيد عن أبي مجلز قال : خرج معاوية على ابن الزبير وابن عامر فقام ابن عامر وجلس ابن الزبير فقال معاوية لابن عامر اجلس فإنني سمعت رسول الله صلى الله عليه و سلم يقول " من أحب أن يمثل له الرجال قياما فليتبوأ مقعده من النار سنن أبي داود " .

(ஜனாதிபதியாக இருந்த) முஆவியா (ரலி) அவர்கள் இப்னுஸ் ஸுபைர், இப்னு ஆமிர் ஆகியோர் இருந்த இடத்துக்கு வந்தார்கள். உடனே இப்னு ஆமிர் அவர்கள் எழுந்து நின்றார்கள். இப்னுஸ் ஸுபைர் அவர்கள் உட்கார்ந்தே இருந்தார்கள். நீர் அமர்வீராக! ஏனெனில் தனக்காக மரியாதை செலுத்தும் வகையில் மற்றவர்கள் எழுந்து நிற்க வேண்டும் என்று யார் விரும்புகிறாரோ அவர் நரகத்தில் தனது தங்குமிடத்தை ஏற்படுத்திக் கொள்ளட்டும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூற நான் செவியுற்றுள்ளேன் என்று இப்னு ஆமிரிடம் முஆவியா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர் : அபூ மிஜ்லஸ்

நூல் : அபூதாவூத்

மக்கள் தம்மைக் கண்டால் எழுந்து மரியாதை செய்ய வேண்டும் என்று எதிர்பார்க்கும் ஹஜரத் கிப்லாக்களும், ஷைகுமார்களும், உலமாக்களும் நரகத்திற்கு முன்பதிவு செய்கிறார்கள் என்பது இதிலிருந்து தெரிகிறது.

தமக்காக மக்கள் எழக் கூடாது என்பதை எந்த அளவுக்கு நபிகள் நாயகம் (ஸல்) வெறுத்தார்கள் என்பதற்கு பின்வரும் நிகழ்ச்சியும் சான்றாகவுள்ளது.

حدثنا قتيبة بن سعيد حدثنا ليث ح و حدثنا محمد بن رمح أخبرنا الليث عن أبي الزبير عن جابر قال اشتكى رسول الله صلى الله عليه وسلم فصلينا وراءه وهو قاعد وأبو بكر يسمع الناس تكبيره فالتفت إلينا فرآنا قياما فأشار إلينا فقعدنا فصلينا بصلاته قعودا فلما سلم قال إن كدتم آنفا لتفعلون فعل فارس والروم يقومون على ملوكهم وهم قعود فلا تفعلوا ائتموا بأئمتكم إن صلى قائما فصلوا قياما وإن صلى قاعدا فصلوا قعودا - مسلم 624

ஒரு முறை நபிகள் நாயகம் (ஸல்) நோய் வாய்ப்பட்டார்கள். அப்போது அவர்கள் உட்கார்ந்த நிலையில் தொழுகை நடத்தினார்கள். நாங்கள் அவர்களுக்குப் பின்னால் நின்று தொழுதோம். அவர்கள் திரும்பிப் பார்த்த போது நாங்கள் நின்று கொண்டிருப்பதைக் கண்டார்கள். சைகை மூலம் எங்களை உட்காரச் சொன்னார்கள். நாங்கள் உட்கார்ந்த நிலையில் அவர்களைப் பின்பற்றித் தொழுதோம். தொழுகையை முடித்தவுடன் 'பாரசீக, ரோமாபுரி மன்னர்கள் அமர்ந்திருக்க மக்கள் நிற்பார்களே அது போன்ற செயலைச் செய்ய முற்பட்டு விட்டீர்களே! இனிமேல் அவ்வாறு செய்யாதீர்கள். உங்கள் தலைவர்களைப் பின்பற்றித் தொழுங்கள்! அவர் நின்று தொழுகை நடத்தினால் நீங்களும் நின்று தொழுங்கள்! அவர் உட்கார்ந்து தொழுகை நடத்தினால் நீங்களும் உட்கார்ந்து தொழுகை நடத்துங்கள்' என்று கூறினார்கள்.

அறிவிப்பவர் : ஜாபிர் (ரலி)

நூல் : முஸ்லிம் 624

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் உட்கார்ந்து தொழுத போது மக்களும் உட்கார்ந்து தொழுததாக புகாரி 689, 732, 733, 805, 1114, 688 ஆகிய ஹதீஸ்களிலும் காணலாம். யாருக்கேனும் நிற்க இயலாத அளவுக்கு உடல் உபாதை ஏற்பட்டால் அவர் உட்கார அனுமதி உண்டு. அந்த அடிப்படையில் தான் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் உட்கார்ந்து தொழுவித்தார்கள்.

பின்னால் தொழுதவர்களுக்கு எந்த உபாதையும் இல்லாததால் அவர்கள் நின்று தொழுதார்கள். அவர்கள் நபிகள் நாயகத்துக்கு மரியாதை செய்வதற்காக நிற்கவில்லை. ஆனாலும் நபிகள் நாயகம் (ஸல்) முன்னால் அமர்ந்திருக்க மற்றவர்கள் பின்னால் நிற்பதைப் பார்க்கும் போது நபிகள் நாயகத்தின் முன்னே

யாரும் அமரக் கூடாது என்பதற்காக நிற்பது போன்ற தோற்றம் ஏற்படுகிறது. ஏனைய நாட்டு மன்னர்களுக்கு முன் மக்கள் நிற்பது போல் இது தோன்றுகிறது. அந்த வாடை கூட தம் மீது வீசக் கூடாது என்பதற்காக அனைவரையும் அமர்ந்து தொழுமாறு நபிகள் நாயகம் ஆணையிடுகிறார்கள்.

தமக்கு மரியாதை செலுத்துவதற்காக அம்மக்கள் நிற்கவில்லை என்பது நன்றாகத் தெரிந்திருந்தும் அப்படியொரு தோற்றம் கூட ஏற்படக் கூடாது என்று கருதி இதற்கும் தடை விதித்தார்கள்.

ஹஜரத் கிப்லாக்கள் தமக்காக மக்கள் எழுந்து நிற்பதை விரும்புகின்றனர். இது இஸ்லாத்துக்கு அப்பாற்பட்ட கலாச்சாரம் என்பது இதிலிருந்தும் உறுதியாகின்றது.

மரியாதை செய்வதற்காக எழுந்து நிற்பது மார்க்கத்தில் தடை செய்யப்பட்டுள்ளது என்றாலும் நம்மைத் தேடி வருபவரை வரவேற்பதற்காக எழுந்து நிற்க அனுமதி உண்டு.

5217 - حدثنا الحسن بن علي وابن بشار قالا ثنا عثمان بن عمر أخبرنا إسرائيل عن ميسرة بن حبيب عن المنهال بن عمرو عن عائشة بنت طلحة عن أم المؤمنين عائشة رضي الله عنها أنها قالت ما رأيت أحدا كان أشبه سمتا وهديا ودلا وقال الحسن حديثا وكلاما ولم يذكر الحسن السمت والهدي والدل برسول الله صلى الله عليه و سلم من فاطمة كرم الله وجهها كانت إذا دخلت عليه قام إليها فأخذ بيدها وقبلها وأجلسها في مجلسه وكان إذا دخل عليها قامت إليه فأخذت بيده فقبلته وأجلسته في مجلسها . سنن أبي داود

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் உருவ அமைப்பு, நடை, பேச்சு அனைத்திலும் அவர்களின் மகள் ஃபாத்திமாவை விட வேறு யாரும் அவர்களுக்கு ஒப்பானவராக இருந்ததில்லை. ஃபாத்திமா அவர்கள் நபிகள் நாயகத்தைக் காண வரும்போது அவரை நோக்கி எழுந்து சென்று அவரது கையைப் பிடித்து முத்தமிடுவார்கள். பின்னர் தமது இருக்கையில் அமரச் செய்வார்கள். அதுபோல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஃபாத்திமாவைச் சந்திக்கச் சென்றால் அவர்களை நோக்கி ஃபாத்திமா எழுந்து வந்து அவர்களின் கையைப் பிடித்து முத்தமிடுவார்கள். பின்னர் தமது இருக்கையில் அமரச் செய்வார்கள்.

அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)

நூல் : அபூதாவூத்

நம் வீட்டுக்கு ஒருவர் வரும் போது நாம் எழலாம். அது போல் அவர் வீட்டுக்கு நாம் போகும் போது அவர் எழ வேண்டும். இதற்குப் பெயர் தான் வரவேற்பு.

ஒருவர் நம்மிடம் வரும் போது நாம் எழுந்து வரவேற்கிறோம். ஆனால் அவரிடம் நாம் சென்றால் அவர் எழுந்து வரவேற்பதில்லை என்றால் மரியாதை நிமித்தமாகவே அவருக்கு நாம் எழுந்துள்ளோம் என்பது பொருள். இது இஸ்லாத்தில் தடை செய்யப்பட்டுள்ளது.

எழுந்து நிற்பது இரு தரப்புக்கும் பொதுவாக இருந்தால் மட்டுமே அது வரவேற்பில் அடங்கும். இந்த ஹதீஸில் இருந்து இதை அறியலாம்.

4121 - حَدَّثَنِي مُحَمَّدُ بْنُ بَشَّارٍ، حَدَّثَنَا غُنْدَرٌ، حَدَّثَنَا شُعْبَةُ، عَنْ سَعْدٍ، قَالَ: سَمِعْتُ أَبَا أُمَامَةَ، قَالَ: سَمِعْتُ أَبَا سَعِيدٍ الخُدْرِيَّ رَضِيَ اللَّهُ عَنْهُ، يَقُولُ: نَزَلَ أَهْلُ قُرَيْظَةَ عَلَى حُكْمِ سَعْدِ بْنِ مُعَاذٍ، فَأَرْسَلَ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ إِلَى سَعْدٍ فَأَتَى عَلَى حِمَارٍ، فَلَمَّا دَنَا مِنَ المَسْجِدِ قَالَ لِلْأَنْصَارِ: «قُومُوا إِلَى سَيِّدِكُمْ، أَوْ خَيْرِكُمْ». فَقَالَ: «هَؤُلاَءِ نَزَلُوا عَلَى حُكْمِكَ». فَقَالَ: تَقْتُلُ مُقَاتِلَتَهُمْ، وَتَسْبِي ذَرَارِيَّهُمْ، قَالَ: «قَضَيْتَ بِحُكْمِ اللَّهِ» وَرُبَّمَا قَالَ: «بِحُكْمِ المَلِكِ»

சஅத் பின் முஆத் (ரலி) அவர்களின் தீர்ப்பை ஏற்பதாக ஒப்புக் கொண்டு (யூதர்களான) பனூ குறைழா குலத்தார் (கைபரிலிருந்த தங்கள் கோட்டையிலிருந்து) இறங்கி வந்தார்கள். அப்போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சஅத் பின் முஆத் அவர்களுக்கு ஆளனுப்பிட, அவர் கழுதையின் மீது ஏறி வந்தார். தொழுமிடத்திற்கு அருகே அவர் வந்து சேர்ந்ததும், நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், உங்கள் தலைவரை நோக்கி எழுந்திருங்கள் என்று அன்சாரிகளிடம் சொன்னார்கள்.....

அறிவிப்பவர் : அபூ ஸயீதுல் குத்ரி (ரலி)

நூல் : புகாரி 4121

சஅத் (ரலி) அவர்கள் வந்த போது அவரை வரவேற்பதற்காகவே அவரை நோக்கி எழுங்கள் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அவருக்கு மரியாதை செலுத்துவதற்காக அல்ல. அவர் நபிகளை விட மரியாதைக்குரியவர் அல்லர்.

தபூக் போரில் கலந்து கொள்ளாத கஅப் (ரலி) உள்ளிட்ட மூவரை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சமூகப் புறக்கணிப்பு செய்திருந்தார்கள். அவர்களை மன்னித்து விட்டதாக 9:117 வசனம் அருளப்பட்டது. அப்போது கஅப் அவர்கள் பள்ளிவாசலுக்குச் சென்ற போது தல்ஹா (ரலி) அவர்கள் அவரை எழுந்து வரவேற்றார்.

4418. قَالَ كَعْبٌ: حَتَّى دَخَلْتُ المَسْجِدَ، فَإِذَا رَسُولُ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ جَالِسٌ حَوْلَهُ النَّاسُ، فَقَامَ إِلَيَّ طَلْحَةُ بْنُ عُبَيْدِ اللَّهِ يُهَرْوِلُ حَتَّى صَافَحَنِي وَهَنَّانِي......

கஅப் கூறுகிறார்: நான் பள்ளிவாசலுக்குச் சென்ற போது நபிகள் நாயகத்தைச் சுற்றி மக்கள் இருந்தனர். உடனே தல்ஹா அவர்கள் என்னை நோக்கி எழுந்து வந்து என்னிடம் முஸாபஹா செய்து எனக்கு நற்செய்தி கூறினார்.

தல்ஹா (ரலி) சொர்க்கவாசிகள் என்று நற்செய்தி கூறப்பட்ட பத்துப் பேரில் ஒருவராவார். இவர் கஅபை விட சிறந்தவராவார். எனவே அவருக்கு மரியாதை செலுத்துவதற்காக எழுந்திருக்க மாட்டார். அவரை வரவேற்று நற்செய்தி கூறுவதற்காகவே எழுந்து சென்றார்.

நாம் ஒருவரைச் சந்திக்கச் செல்கிறோம். நம்மைக் கண்டவுடன் அவர் எழவில்லை; ஆனால் நம்மை விட முக்கியத் தலைவர் சந்திக்கச் சென்றால் எழுகிறார் என்றும் வைத்துக் கொள்வோம்.

அவர் மரியாதை செய்வதற்காகவே முக்கியத் தலவருக்காக எழுந்துள்ளார் என்பது தெளிவாகிறது. பெரியவரோ சிறியவரோ யார் வந்தாலும் எழுந்து வரவேற்பார் என்றால் அவர் மரியாதைக்காக இவ்வாறு செய்யவில்லை என்று புரிந்து கொள்ள முடியும்.

மேலும் மதிப்பு மிக்க ஒருவரும், மதிப்பு குறைந்த ஒருவரும் சந்திக்கிறார்கள். இரண்டாமவர் முதலாமவருக்காக எழுகிறார். ஆனால் முதலாமவர் இரண்டாம் நபருக்காக எழுவதில்லை என்றால் இது மாரியாதை செய்வதற்காக எழுந்து நிற்பதாகக் கருதப்படும். இப்படி கவனமாக நடந்து கொள்ள வேண்டும்.

## மனிதருக்கு சிரம் பணியலாமா?

ஒருமனிதர் இன்னொரு மனிதருக்கு மரியாதை செலுத்துவதற்காக எழுவதற்கே அனுமதி இல்லை என்றால் சிரம் பணிதல் அறவே கூடாது என்ற கருத்து இதனுள் அடங்கியுள்ளது.

அத்துடன் தெளிவாகவும் இது தடைசெய்யப்பட்டுள்ளது என்பதற்கும் ஆதாரங்கள் உள்ளன.

இரவு, பகல், சூரியன், சந்திரன் ஆகியவை அவனது அத்தாட்சிகளில் உள்ளவை. சூரியனுக்கோ, சந்திரனுக்கோ ஸஜ்தாச் செய்யாதீர்கள்! அவனையே நீங்கள் வணங்குவோராக இருந்தால் அவற்றைப் படைத்த அல்லாஹ்வுக்கே ஸஜ்தாச் செய்யுங்கள்!

திருக்குர்ஆன் 41:37

படைக்கப்பட்டவற்றுக்கு ஸஜ்தாச் செய்யக் கூடாது. படைத்தவனுக்குத்தான் ஸஜ்தாச் செய்ய வேண்டும் என்று இவ்வசனம் தெளிவுபடக் கூறுகிறது.

படைத்தவன் அல்லாஹ் மட்டுமே. எந்த மகான்களாக இருந்தாலும் அவர்கள் படைக்கப்பட்டவர்கள் என்பதால் அவர்களுக்கு ஸஜ்தா செய்ய அனுமதியில்லை என்பதில் சந்தேகமில்லை.

1159 - حدثنا محمود بن غيلان حدثنا النضر بن شميل أخبرنا محمد بن عمرو عن أبي سلمة عن أبي هريرة : عن النبي صلى الله عليه و سلم قال لو كنت آمرا أحدا أن يسجد لأحد لأمرت المرأة أن تسجد لزوجها - سنن الترمذي

ஒரு மனிதன் இன்னொரு மனிதனுக்கு சஜ்தா செய்வதை நான் அனுமதிப்பதாக இருந்தால் கணவனுக்கு மனைவி ஸஜ்தா செய்வதை நான் அனுமதித்திருப்பேன் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)

நூல் : திர்மிதி

அன்றைய காலம் முதல் இன்றைய காலம் வரை கணவனை மனைவி வழிபட வேண்டும் என்ற நிலை இருந்து வருகிறது. கணவன் காலில் மனைவி

விழுவதை உலகமே அனுமதிக்கும் போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அதைத் தடை செய்தார்கள். அதற்கான காரணத்தை இந்த ஹதீஸில் விளக்குகிறார்கள். எந்த மனிதனும் எந்த மனிதனுக்கும் சிரம் பணியக் கூடாது என்ற இஸ்லாத்தின் அடிப்படைக் கொள்கையே இதற்குக் காரணம் என்று நபிகள் நாயகம் (ஸல்) விளக்குகிறார்கள்.

சமுதாயத்தில் எவ்வளவு மதிப்புமிக்கவர் என்றாலும் அவர் காலில் விழுவதற்கு இஸ்லாத்தில் அறவே அனுமதியில்லை.

## ஆதம் (அலை) அவர்களுக்கு வானவர்கள் ஸஜ்தா செய்தார்களா?

முதல் மனிதராகிய ஆதம் (அலை) அவர்களை இறைவன் படைத்தவுடன் அவரது திறமையை வெளிப்படுத்திக் காட்டி அவருக்கு ஸஜ்தாச் செய்யுமாறு வானவர்களுக்குக் கட்டளையிட்டான் என 2:34, 7:11, 15:29-31, 17:61, 18:50, 20:116, 38:72 வசனங்களில் கூறப்பட்டுள்ளது.

இவ்வசனங்களைச் சான்றாகக் கொண்டு பெரியார்களுக்கும், மகான்களுக்கும் ஸஜ்தா (சிரம் பணிதல்) செய்யலாம் என்று சிலர் வாதிட்டு வருகின்றனர். இது முற்றிலும் தவறாகும்.

ஆதம் (அலை) அவர்களுக்கு வானவர்கள் ஸஜ்தாச் செய்தார்கள் எனக் கூறும் வசனங்களுக்கு காலில் விழுந்து பணிந்தார்கள் என்று பொருள் கொள்வதா? பணிவைக் காட்டினார்கள் என்று பொருள் கொள்வதா? என்பதை அறிந்து கொண்டால் காலில் விழுவதற்கு இதை ஆதாரமாகக் காட்ட மாட்டார்கள்.

ஸஜ்தா என்ற சொல் அரபு மொழியில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு முன்பே பயன்படுத்தப்பட்டு வந்தது.

நெற்றி, மூக்கு, இரண்டு உள்ளங்கைகள், இரண்டு மூட்டுக் கால்கள், இரு கால்களின் விரல்கள் ஆகியவை தரையில் படும் வகையில் பணிவது ஸஜ்தா என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் விளக்கியுள்ளனர்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இவ்விளக்கம் அளிப்பதற்கு முன்னால் இவ்வார்த்தைக்கு இவ்வாறு பொருள் இல்லை. நன்றாகப் பணியுதல் என்பதே இவ்வார்த்தையின் பொருளாக இருந்தது. பணிவைக் காட்டும் எல்லாக் காரியங்களும் ஸஜ்தா எனக் குறிப்பிடப்பட்டன.

அகராதியில் மட்டுமின்றி திருக்குர்ஆனிலும் நன்றாகப் பணியுதல் என்ற பொருளில் இவ்வார்த்தை பல இடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

"இவ்வூருக்குள் செல்லுங்கள்! அங்கே விரும்பியவாறு தாராளமாக உண்ணுங்கள்! வாசல் வழியாக ஸஜ்தா செய்தவர்களாக (பணிவாக) நுழையுங்கள்!

திருக்குர்ஆன் 2:58

அவர்களிடம் உடன்படிக்கை எடுப்பதற்காக தூர் மலையை அவர்களுக்கு மேல் உயர்த்தினோம். "ஸஜ்தா செய்தவர்களாக (பணிந்து) வாசல் வழியாக நுழையுங்கள்!" என்று அவர்களிடம் கூறினோம்.

திருக்குர்ஆன் 4:154

"இவ்வூரில் குடியிருங்கள்! விரும்பியதை இதில் உண்ணுங்கள்! 'மன்னிப்பு (கேட்கிறோம்)' எனக் கூறுங்கள்! ஸஜ்தா செய்தவர்களாக (பணிந்து) வாசல்வழியாக நுழையுங்கள்!

திருக்குர்ஆன் 7:161

இம்மூன்று வசனங்களிலும் ஸஜ்தா செய்தவர்களாக ஊருக்குள் நுழையுங்கள் என்று இஸ்ரவேலர்களுக்கு கட்டளையிட்டதை அல்லாஹ் எடுத்துக் காட்டுகிறான்.

அகராதியில் உள்ள பணிவு என்ற பொருளைத்தான் இவ்வசனங்களில் உள்ள ஸஜ்தா என்ற சொல்லுக்குக் கொடுக்க முடியும். இஸ்லாமிய வழக்கில் உள்ள ஸஜ்தாவுக்குரிய பொருளை இங்கே கொள்ள முடியாது. ஏனெனில் இந்த ஸஜ்தாவைச் செய்து கொண்டு வாசல் வழியாக நுழைய இயலாது.

ஸஜ்தா செய்தவர்களாக நடக்கவோ, ஊரில் நுழையவோ முடியாது என்பது அனைவரும் அறிந்த விஷயம். எனவே பணிந்தவர்களாக நுழையுங்கள் என்று தான் இம்மூன்று வசனங்களுக்கும் பொருள் கொள்ள முடியும். ஸஜ்தா என்பதற்கு பணிவு என்பதுதான் அகராதிப் பொருள் என்பதை இதிலிருந்து அறியலாம்.

"வானங்களில் உள்ளோரும், பூமியில் உள்ளோரும், சூரியனும், சந்திரனும், நட்சத்திரங்களும், மலைகளும், மரங்களும், உயிரினங்களும், மனிதர்களில் அதிகமானோரும் அல்லாஹ்வுக்கு ஸஜ்தா செய்கின்றன (பணிகின்றனர்)" என்பதை நீர் அறியவில்லையா?

திருக்குர்ஆன் 22:18

மனிதர்கள் மட்டுமின்றி சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், மரங்கள், ஊர்வன, மலைகள் உள்ளிட்ட அனைத்தும் அல்லாஹ்வுக்கு ஸஜ்தாச் செய்கின்றன என்று இவ்வசனம் கூறுகிறது.

இவற்றுக்கு முகமோ, மூக்கோ, கைகளோ, மூட்டுக் கால்களோ கிடையாது. குனிந்து மரியாதை செய்வதற்கான முதுகும் கிடையாது. மலைகளோ, மரங்களோ இருக்கின்ற இடத்தை விட்டு நகர்வது கூட இல்லை. ஆனாலும், இவை தனக்கு ஸஜ்தாச் செய்கின்றன என்று அல்லாஹ் கூறுகிறான்.

சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் ஆகியவை ஓய்வின்றி இறைவன் வகுத்தளித்த திட்டப்படி சுற்றிச் சுழன்று வருகின்றன. இதுதான் அவற்றுக்கான ஸஜ்தா- பணிவு -ஆகும். மரங்கள் பூத்துக் காய்த்துக் குலுங்குவது அவற்றுக்குரிய ஸஜ்தா- பணிவு -ஆகும்.

இப்பூமியைத் தடம் புரளாமல் தடுத்து நிறுத்தும் பணியை அல்லாஹ்வின் கட்டளைப்படி மலைகள் செய்து வருகின்றன. இது மலைகளுக்கான ஸஜ்தா- பணிவு -ஆகும்.

மொத்தத்தில் படைக்கப்பட்ட அனைத்தும் இறைவனது உயர்வையும், தங்களது தாழ்வையும் ஒப்புக் கொண்டு பணிந்து வருகின்றன. பணிந்து நடப்பது தான் இங்கே ஸஜ்தா எனப்படுகிறது.

வானங்களிலும், பூமியிலும் உள்ளவை விரும்பியோ, விரும்பாமலோ அவனுக்கே ஸஜ்தா செய்கின்றன (பணிகின்றன). அவற்றின் நிழல்களும் காலையிலும், மாலையிலும் ஸஜ்தா செய்கின்றன (பணிகின்றன).

திருக்குர்ஆன் : 13:15

இவ்வசனத்தில் பயன்படுத்தப்பட்டுள்ள ஸஜ்தா என்ற சொல்லுக்கு இஸ்லாத்தின் வணக்கங்களில் ஒன்றாகிய ஸஜ்தா என்ற பொருள் கொடுக்க முடியாது. பணிகின்றன என்ற அகராதிப் பொருள் தான் கொடுக்க முடியும்.

அல்லாஹ் படைத்த ஒவ்வொரு பொருளையும் அவர்கள் பார்க்கவில்லையா? அதன் நிழல்கள் வலப்புறங்களிலும், இடப்புறங்களிலும் சாய்ந்து அல்லாஹ்வுக்கு விழுந்து ஸஜ்தா செய்கின்றன (பணிகின்றன). வானங்களில் உள்ளவையும், பூமியில் உள்ள உயிரினங்களும், வானவர்களும் அல்லாஹ்வுக்கே ஸஜ்தாச் செய்கின்றனர். (பணிகின்றன) வானவர்கள் பெருமையடிக்க மாட்டார்கள்.

திருக்குர்ஆன் 16:48,49

இவ்வசனத்திலும் பணியுதல் என்ற பொருளிலேயே ஸஜ்தா என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளதைத் தெளிவாக அறியலாம்.

வானவர்கள் ஆதமுக்கு ஸஜ்தாச் செய்ததாகக் கூறும் மேற்கண்ட வசனங்களையும் இப்படித்தான் புரிந்து கொள்ள வேண்டும். இதற்குத் தக்க காரணங்களும் உள்ளன.

வானவர்கள் மனிதனைப் போன்றவர்கள் அல்லர். அவர்களுக்கு என திட்டவட்டமான உருவம் ஏதும் இல்லை. சில நேரங்களில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் ஜிப்ரீல் என்னும் வானவர் மனித வடிவத்தில் வந்துள்ளார். அதுவே அவரது வடிவம் என்று கூற முடியாது. ஏனெனில், வானத்தையும், பூமியையும் வியாபித்த வடிவத்திலும் அவர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்குக் காட்சி தந்துள்ளார். (பார்க்க : புகாரீ 4)

வானவர்களுக்குச் சிறகுகள் உள்ளன என்று 35:1 வசனம் கூறுகிறது.

எனவே, வானவர்களை நம்மைப் போன்றவர்களாகக் கருத முடியாது. அவர்களால் பணிவை எவ்வாறு வெளிப்படுத்த முடியுமோ அவ்வாறு பணிவை வெளிப்படுத்தினார்கள் என்று தான் கருத முடியும்.

நாம் இப்போது செய்வது போலவே அவர்கள் ஸஜ்தாச் செய்தார்கள் என்று ஒரு வாதத்திற்காக வைத்துக் கொண்டால் கூட அதை நாம் பின்பற்ற முடியாது. காரணம் ஸஜ்தாச் செய்யுமாறு அல்லாஹ் கட்டளையிட்டதால் தான் வானவர்கள் ஆதமுக்கு ஸஜ்தாச் செய்தனர்.

பெரியவர்களுக்குச் ஸஜ்தாச் செய்யுங்கள் என்று அல்லாஹ்வோ, அல்லாஹ்வின் தூதரோ நமக்குக் கட்டளையிடவில்லை. மாறாகத் தடை விதித்துள்ளனர். மனிதனுக்கு மனிதன் ஸஜ்தா செய்யக் கூடாது என்று தெளிவான தடைகள் பல இருக்கும் போது அதற்கு முரணில்லாத வகையில் தான் ஆதம் நபிக்கு வானவர்கள் ஸஜ்தாச் செய்தனர் என்பதையும் புரிந்து கொள்ள வேண்டும்.

காலில் விழுந்து பணிந்தார்கள் என்று பொருள் கொண்டால் அல்லாஹ்வுக்கு மட்டுமே ஸஜ்தாச் செய்ய வேண்டும் என்று கூறும் ஏராளமான ஆதாரங்களை மறுக்க வேண்டிய நிலை ஏற்படும். யூஸஃப் நபிக்கு அவர்களின் சகோதரர்கள் ஸஜ்தா செய்தார்களா?

'என் தந்தையே! பதினோரு நட்சத்திரங்களையும், சூரியனையும், சந்திரனையும் நான் (கனவில்) கண்டேன். அவை எனக்கு ஸஜ்தா செய்ய (பணிய)க் கண்டேன்' என்று யூஸுஃப் தமது தந்தையிடம் கூறியதை நினைவூட்டுவீராக!

திருக்குர்ஆன் 12:4

நட்சத்திரங்களும், சூரியனும், சந்திரனும் யூஸுஃப் நபிக்கு ஸஜ்தா செய்ததாக இவ்வசனம் கூறுகிறது. சூரியன் என்பது யூஸுஃப் நபியின் தந்தையையும், சந்திரன் என்பது அவரது தாயையும், பதினொரு நட்சத்திரங்கள் என்பது பதினொரு சகோதரர்களையும் குறிக்கும். எனவே இது பெரியார்களுக்கு ஸஜ்தாச் செய்யலாம் என்பதற்கு ஆதாரமாகும் என்று சிலர் வாதிடுகின்றனர்.

யூஸுஃப் நபியின் பெற்றோரையும், சகோதரர்களையும் குறிக்கும் என்பது இதன் விளக்கமாக இருந்தாலும், சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் ஸஜ்தா செய்ததாகத் தான் யூஸுஃப் நபி கனவு கண்டார்கள். மேற்கண்டவற்றால் ஸஜ்தா செய்ய முடியாது என்பதால் பணிந்தன என்று தான் பொருள் கொள்ள முடியும்.

மேலும் இக்கனவு எப்படி நிறைவேறியது என்பதைப் பின்வரும் வசனம் விளக்குகிறது.

தமது பெற்றோரைச் சிம்மாசனத்தின் மீது அமரச் செய்தார். அவர்கள் அனைவரும் அவருக்குப் பணிந்தனர். 'என் தந்தையே! முன்னர் நான் கண்ட கனவுக்கு விளக்கம் இதுவே. அதை என் இறைவன் உண்மையாக்கி விட்டான்.

திருக்குர்ஆன் 12:100

12:4 வசனத்தின் விளக்கமே இப்போது. நிறைவேறுகிறது.

நட்சத்திரங்கள் சகோதரர்களையும், சூரியன் தந்தையையும், சந்திரன் தாயையும் குறிக்கின்றது. கனவில் கண்டது அப்படியே நிறைவேற வேண்டுமானால் அனைவரும் அவருக்கு ஸஜ்தாச் செய்தனர் என்பதில் யூஸுஃப் நபியின் பெற்றோரும் அடங்குவார்கள். யூஸுஃப் நபியின் பெற்றோர் யூஸுஃப் நபிக்கு ஸஜ்தா செய்ததாக இவ்வசனம் கூறவில்லை. செய்யவில்லை என்ற கருத்தையே தருகிறது. யூசுஃப் நபியின் பெற்றோர் உயரமான ஆசனத்தில் அமர வைக்கப்பட்டனர். அனைவரும் அவருக்குப் பணிந்தனர் என்பதில் இருந்து இதை விளங்கலாம்.

யாருக்கு ஸஜ்தாச் செய்யப்படுகிறதோ அந்த யூஸுஃப் நபியவர்கள் சிம்மாசனத்தில் அமர்ந்து, அவரது பெற்றோரும், சகோதரர்களும் கீழே நின்றார்கள் என்றும் சொல்லப்பட்டால் பெற்றோரும் சகோதரர்களும் ஸஜ்தாச் செய்தனர் என்று கருதலாம்.

ஆனால் ஸஜ்தா செய்யப் போகும் யூஸுஃப் நபியின் பெற்றோர் சிம்மானத்தில் அமர வைக்கப்பட்டார்கள் என்று இவ்வசனம் கூறுவதால் அவர்கள் சிரம் பணியவில்லை என்று ஆகிறது. அப்படியானால் 12:4 வசனத்தில் அல்லாஹ் அறிவித்துக் கொடுத்தபடி நடக்கவில்லை என்று ஆகிவிடும்.

ஸஜ்தா என்ற சொல்லுக்கு பொருத்தமில்லாத சிரம் பணிதல் என்று தவறான பொருள் கொண்டதுதான் இதற்குக் காரணமாகும்.

ஆனால் 12:4 வசனத்திற்கு ஸஜ்தாச் செய்தனர் என்று பொருள் கொள்ளாமல் பணிந்தனர் என்று பொருள் கொண்டால் இரண்டு வசனங்களும் ஒன்றை ஒன்று மெய்ப்பிக்கின்றன.

யூஸுஃப் நபியின் பெற்றோர் சிம்மாசனத்தில் அமர்ந்தாலும் யூஸுஃப் நபிக்கு இருந்த மன்னர் என்ற தகுதியை ஒப்புக் கொள்வதன் மூலம் பணிவைக் காட்ட முடியும். அனைவரும் பணிந்தனர் என்பது அப்படியே பொருந்திப் போகின்றது.

யூஸுஃப் எவ்வாறு நபியாக இருந்தார்களோ அவ்வாறு அவர்களின் தந்தை யஃகூப் அவர்களும் நபியாக இருந்தனர். அத்துடன் தந்தை என்ற தகுதியும் அவர்களுக்கு இருந்தது. அவ்வாறிருக்க யஃகூப் நபி எவ்வாறு மகனுக்கு ஸஜ்தாச் செய்திருப்பார்கள் என்பதைச் சிந்தித்தால் மனிதன் காலில் மனிதன் விழுவதற்கு இதில் ஆதாரம் இல்லை என்பதை உணரலாம்.

## நபியின் கால்களை நபித்தோழர்கள் முத்தமிட்டார்களா?

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைச் சந்திக்க வெளியூரிலிருந்து வந்த சிலர் நபிகள் நாயகத்தின் கைகளையும், கால்களையும் முத்தமிட்டதாக சில ஹதீஸ்கள் உள்ளன.

பெரியார்களின் கால்களை முத்தமிடுவதற்கும், சிரம் பணிவதற்கும் இவை சான்றுகளாக உள்ளந என்று தவறான கொள்கையுடையோர் வாதிடுகின்றனர்.

அந்த ஹதீஸ்களின் நிலை என்ன என்பதைப் பார்ப்போம்.

حدثنا أبو كريب حدثنا عبد الله بن إدريس وأبو أسامة عن شعبة عن عمرو بن مرة عن عبد الله بن سلمة عن صفوان بن عسال قال قال يهودي لصاحبه اذهب بنا إلى هذا النبي فقال صاحبه لا تقل نبي إنه لو سمعك كان له أربعة أعين فأتيا رسول الله صلى الله عليه وسلم فسألاه عن تسع آيات بينات فقال لهم لا تشركوا بالله شيئا ولا تسرقوا ولا تزنوا ولا تقتلوا النفس التي حرم الله إلا بالحق ولا تمشوا ببريء إلى ذي سلطان ليقتله ولا تسحروا ولا تأكلوا الربا ولا تقذفوا محصنة ولا تولوا الفرار يوم الزحف وعليكم خاصة اليهود أن لا تعتدوا في السبت قال فقبلوا يده ورجله فقالا نشهد أنك نبي قال فما يمنعكم أن تتبعوني قالوا إن داود دعا ربه أن لا يزال في ذريته نبي وإنا نخاف إن تبعناك أن تقتلنا اليهود وفي الباب عن يزيد بن الأسود وابن عمر وكعب بن مالك قال أبو عيسى هذا حديث حسن صحيح – ترمذي 2657 وابن ماجة 3695 واحمد 17397

இந்த நபியிடம் என்னை அழைத்துச் செல் என்று ஒரு யூதர் தனது தோழரிடம் கூறினார். அவரை நபி என்று சொல்லாதே! அவரது காதில் விழுந்தால் அவருக்கு நான்கு கண்கள் ஏற்பட்டு விடும் (அதாவது கர்வம் ஏற்பட்டு விடும்) என்று அந்தத் தோழர் கூறினார். பின்னர் இருவரும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் வந்தனர். தெளிவான ஒன்பது அத்தாட்சிகள் யாவை என்று கேட்டனர். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், அல்லாஹ்வுக்கு எதையும் இணையாக்காதீர்கள்! திருடாதீர்கள்! விபச்சாரம் செய்யாதீர்கள்! தக்க காரணமில்லாமல் கொலை செய்வதை அல்லாஹ் ஹராமாக்கியுள்ளதால் கொலை செய்யாதீர்கள்! குற்றம் செய்யாதவனைக் கொலை செய்வதற்காக மன்னரிடம் பிடித்துக் கொடுக்காதீர்கள்! சூனியம் செய்யாதீர்கள்! வட்டியை உண்ணாதீர்கள்! ஒழுக்கமுள்ள பெண்கள் மீது அவதூறு சொல்லாதீர்கள்! போர்க்களத்தில் பின்வாங்காதீர்கள்! யூதர்களே குறிப்பாக நீங்கள் சனிக்கிழமையில் வரம்பு மீறாதீர்கள்! என்று கூறினார்கள்! உடனே அவர்கள் நபிகள் நாயகத்தின் கைகளையும், கால்களையும் முத்தமிட்டனர். நீங்கள் நபி என்பதை நாங்கள் ஏற்றுக் கொள்கிறோம் என்று கூறினார்கள்.

அப்படியானால் என்னைப் பின்பற்ற உங்களுக்கு என்ன தடை? என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கேட்டார்கள். அதற்கு அவர்கள் தாவூத் நபியவர்கள் தனது வழித்தோன்றலில் ஒரு நபி இருந்து கொண்டே இருப்பார் என்று கூறியுள்ளனர். எனவே உங்களை நாங்கள் ஏற்றுக் கொண்டால் யூதர்கள் எங்களைக் கொன்று விடுவார்கள் என்று அஞ்சுகிறோம் என்றனர்.

அறிவிப்பவர் : ஸஃப்வான் பின் அஸ்ஸால் (ரலி)

நூல்கள் : அஹ்மத், திர்மிதி, இப்னுமாஜா

இதைப் பதிவு செய்த திர்மிதி இது ஆதாரப்பூர்வமான ஹதீஸ் என்று கூறியுள்ளார்.

ஆனால் இது ஆதாரப்பூர்வமான ஹதீஸ் அல்ல. நஸாயீ அவர்கள் இதன் கருத்து சரியாக இல்லை என்பதால் முன்கர் (இதைவிட வலுவான ஆதாரத்துக்கு எதிரானது) என்று கூறியுள்ளார்.

அறிவிப்பாளரில் குறை உள்ளதால் இது பலவீனமானது என்று முன்திரி கூறியுள்ளார்.

இதன் கருத்து எப்படி தவறானது என்பதை விளக்கமாகப் பார்ப்போம்.

திருக்குர்ஆனில் 17:101 வசனத்தில் மூஸா நபிக்கு ஒன்பது அத்தாட்சிகளைக் கொடுத்தோம் என்று அல்லாஹ் கூறுகிறான். இது யூத வேதங்களிலும் உள்ளது. இதைப் பற்றித் தான் அவர்கள் கேள்வி கேட்கின்றனர். மூஸா நபிக்கு கொடுத்த ஒன்பது அத்தாட்சிகள் என்பது மூஸா நபிக்கு கொடுத்த அற்புதங்கள் பற்றியதாகும். அவருக்கு வழங்கப்பட்ட கட்டளைகள் பற்றியதல்ல.

தெளிவான ஒன்பது சான்றுகளை மூஸாவுக்கு வழங்கினோம். அவர்களிடம் அவர் வந்தபோது (நடந்ததை) இஸ்ராயீலின் மக்களிடம் கேட்பீராக! "மூஸாவே! உம்மை சூனியம் செய்யப்பட்டவராகவே நான் கருதுகிறேன்" என்று அப்போது அவரிடம் ஃபிர்அவ்ன் கூறினான்.

திருக்குர்ஆன் 17:101

ஒன்பது அத்தாட்சிகளை மூஸா நபிக்கு வழங்கியதாகக் கூறும் இறைவன் அதன் பொருளைப் பின்வரும் வசனத்தில் சொல்லித் தருகிறான்.

"உமது கையை உமது சட்டைப் பையில் நுழைப்பீராக! அது எவ்விதத் தீங்குமின்றி வெண்மையாக வெளிப்படும். ஃபிர்அவ்னிடமும், அவனது சமுதாயத்திடமும் ஒன்பது சான்றுகளுடன் (செல்வீராக!) அவர்கள் குற்றம் புரியும் கூட்டமாகவுள்ளனர்" (என்று இறைவன் கூறினான்).

திருக்குர்ஆன் 27:12

ஒன்பது சான்றுகள் என்பது மூஸா நபிக்கு வழங்கப்பட்ட ஒன்பது அற்புதங்களையே குறிக்கிறது என்று இவ்வசனம் சொல்வதால் இதற்கு மாற்றமாக நபியவர்கள் பதிலளித்ததாகக் கூறுவது கட்டுக் கதையாகும். இதை ஆதாரமாகக் கொள்ள முடியாது.

இதன் அறிவிப்பாளர் தொடரில் வரும் அப்துல்லாஹ் பின் சலமா அல் ஹமதானி என்பார் அறிவிப்பவற்றில் ஏற்கத் தக்கவையும் நிராகரிக்கத் தக்கவையும் உள்ளன என்று அபூ ஹாதம் கூறுகிறார்கள். (ஆதாரம் அல்ஜர்ஹு வத்தஃதீல்)

மேலும் காலில் விழுவதைத் தடை செய்யும் வலுவான ஆதாரங்களுக்கு முரணாக இந்தச் செய்தி அமைந்துள்ளதால் மேலும் இது பலவீனப்படுகிறது. இதை ஆதாரமாகக் கொள்ள முடியாது.

இது போல் அமைந்த பின்வரும் ஹதீஸையும் தவறான கொள்கையுடயவர்கள் எடுத்துக் காட்டுகிறார்கள்.

حدثنا محمد بن عيسى بن الطباع حدثنا مطر بن عبد الرحمن الأعنق حدثتني أم أبان بنت الوازع بن زارع عن جدها زارع وكان في وفد عبد القيس قال لما قدمنا المدينة فجعلنا نتبادر من رواحلنا فنقبل يد النبي صلى الله عليه وسلم ورجله قال وانتظر المنذر الأشج حتى أتى عيبته فلبس ثوبيه ثم أتى النبي صلى الله عليه وسلم فقال له إن فيك خلتين يحبهما الله الحلم والأناة قال يا رسول الله أنا أتخلق بهما أم الله جبلني عليهما قال بل الله جبلك عليهما قال الحمد لله الذي جبلني على خلتين يحبهما الله ورسوله – ابو داود 4548 - سنن البيهقي الكبرى ج: 7 ص: 102 -13365 - المعجم الأوسط ج: 1 ص: 133 - 418 // المعجم الكبير ج: 5 ص: 275 - 5313

(அப்துல் கைஸ் கூட்டத்தைச் சேர்ந்த) நாங்கள் மதீனா வந்து எங்கள் வாகனத்திலிருந்து இறங்கியதும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் கைகளையும் கால்களையும் முத்தமிடலானோம்....

அறிவிப்பவர் : ஸாரிவு (ரலி)

நூல்கள் : அபூதாவூத், பைஹகீ, தப்ரானி அவ்ஸத், தப்ரானி கபீர்

இந்த ஹதீஸை சில அறிஞர்கள் சரியான ஹதீஸ் என்று கூறி இருந்தாலும் தக்க காரணமில்லாமல் தான் அவ்வாறு கூறுகிறார்கள்.

இது பற்றி விபரமாகப் பார்ப்போம்.

ஸாரிவு என்ற நபித்தோழர் கூறியதாக இதை அறிவிப்பவர் அவரது பேத்தி உம்மு அபான் என்று இந்த ஹதீஸில் சொல்லப்பட்டுள்ளது.

இவர் நபித்தோழர் அல்ல என்பதால் இவரது நம்பகத் தன்மைக்கு ஆதாரங்கள் இருந்தால் தான் இவரது அறிவிப்புகளை ஏற்றுக் கொள்ள முடியும்.

இந்த ஹதீஸ் சரியானது என்று கூறுபவர்கள் உம்மு அபான் என்ற பெண்ணின் நாணயம், நேர்மை, நினைவாற்றல் குறித்த நற்சான்றுகளை எடுத்துக் காட்டி அப்படிக் கூற வேண்டும். இவரது நாணயம், நேர்மை பற்றி ஒரு அறிஞரும் நற்சான்று கொடுக்கவில்லை. ஒரு அறிஞருக்கும் இவரைப் பற்றி தெரியவில்லை.

أم أبان بنت الوازع عن جدها زارع، تفرد عنها مطر الأعنق.

இவர் வழியாக ம(த்)தர் என்பவர் மட்டுமே அறிவித்துள்ளார் என்று தஹபி கூறுகிறார்.

அதாவது ஒரே ஒருவர் தான் இவரைப் பற்றி அறிந்திருக்கிறார் என்று தஹபி கூறுகிறார்.

رواه الطبراني وأم أبان لم يرو عنها غير مطر

உம்மு அபான் வழியாக ம(த்)தர் என்பவர் மட்டுமே அறிவித்துள்ளார் என்று மஜ்மவுஸ் ஸவாயித் நூலில் ஹைஸமீ கூறுகிறார்.

ஒரு அறிவிப்பாளர் மட்டுமே அறிவித்து வேறு எந்த அறிஞரும் ஒருவரைப் பற்றி நற்சான்று அளிக்காவிட்டால் அவர் யாரென அறியப்படாதவர் ஆவார். அதாவது பலவீனமானவராவார்.

இது பற்றி இப்னு ஹஜர் அவர்கள் தமது நுக்பா எனும் நூலில் பின்வருமாறு கூறுகிறார்.

النوع (40): فإن سمى الراوي وانفرد راو واحد بالرواية عنه فهو مجهول العين

ஒரு அறிவிப்பாளர் தனக்கு முந்தைய அறிவிப்பாளரின் பெயரைக் கூறுகிறார். அவர் மட்டுமே அந்த அறிவிப்பாளரிடமிருந்து அறிவித்து இருந்தால் அந்த அறிவிப்பாளர் யாரென அறியப்படாதவர் ஆவார்.

இந்தக் காரணத்தால் உம்மு அபான் மஜ்ஹூல் - யாரென அறியப்படாதவர் - ஆவார். எனவே இது ஆதாரப்பூர்வமான ஹதீஸ் அல்ல.

இப்னு ஹஜர் அவர்கள் தமது தக்ரீப் நூலில் இவர் மக்பூல் – ஒப்புக் கொள்ளப்பட்டவர் என்று கூறியதை ஆதாரமாகக் காட்டி இது சரியான ஹதீஸ் என்று சிலர் வாதிடுகின்றனர்.

மக்பூல் என்ற சொல்லுக்கு ஒப்புக் கொள்ளப்பட்டவர் என்று அகராதியில் பொருள் இருந்தாலும் இப்னு ஹஜரின் வழக்கத்தில் இதன் பொருள் அதுவல்ல.

அறிவிப்பாளர்களைப் பன்னிரண்டு தரமுடையவர்களாக பிரித்திருப்பதாகக் கூறும் இப்னு ஹஜர் அவர்கள் அதன் விளக்கத்தையும் தக்ரீப் நூலின் முன்னுரையில் கூறுகிறார்.

மக்பூல் என்பதை ஆறாவது தரமாகக் குறிப்பிடுகிறார்.

ஐந்தாவது தரமாக அவர் கூறுவதைப் பாருங்கள்.

الخامسة: من قصر عن الرابعة قليلاً، وإليه الإشارة بصدوق سيء الحفظ، أو صدوق يهم، أو له أوهام، أو يخطئ، أو تغير بأخرة ويلتحق بذلك من رمي بنوع من البدعة، كالتشيع والقدر، والنصب، والإرجاء، والتجهم، مع بيان الداعية من غيره.

உண்மையாளர் ஆனால் நினைவாற்றல் குறைந்தவர் என்றோ, உண்மையாளர் என்றாலும் தவறாகவும் கூறுவார் என்றோ, அல்லது தவறு செய்பவர் என்றோ, இறுதிக் காலத்தில் மூளை குழம்பியவர் என்றோ நான் குறிப்பிடுபவர்கள் ஐந்தாவது தரத்தில் உள்ளவர்களாவர் எனக் கூறுகிறார்.

இவர்களை விட தாழ்ந்த தரத்தில் உள்ள ஆறாவது தரத்தில் உள்ளவர்களைத் தான் மக்பூல் என்று தான் சொல்வதாக இப்னு ஹஜர் கூறுகிறார்.

மக்பூல் பற்றி இப்னு ஹஜர் கூறும் விளக்கத்தைப் பாருங்கள்!

السادسة: من ليس له من الحديث إلا القليل، ولم يثبت فيه ما يترك حديثه من أجله، وإليه الإشارة بلفظ: مقبول، حيث يتابع، وإلا فلين الحديث.

ஒருவர் குறைவான ஹதீஸ் அறிவித்து, அவரைக் காரணம் காட்டி ஒரு ஹதீஸ் பலவீனம் என்று சொல்லப்படவில்லையானால் அவர் தான் மக்பூல் என்கிறார்.

நான்காம் படித்தரத்தில் உள்ள அறிவிப்பாளர்கள் இடம் பெறும் ஹதீஸ்களை பலவீனம் என்று சொல்பவர்கள் அதைவிட தரத்தில் குறைந்த ஐந்தாம் நிலையில் உள்ளவர் இடம் பெற்ற ஹதீஸை சரியானது என்று கூறியிருப்பது வியப்பாக உள்ளது.

மேலும் காலில் விழக் கூடாது என்று தடை செய்யும் ஆதாரங்களை முன்னர் குறிப்பிட்டுள்ளோம். அந்த ஆதாரங்களுக்கு மாற்றமாக இந்த ஹதீஸ்கள் அமைந்திருப்பதால் இன்னும் கடுமையான பலவீனமுடையதாக இந்த ஹதீஸ்கள் ஆகிவிடுகின்றன.

## கைகளை முத்தமிடுதல்

பெரியார்கள், உலமாக்கள், ஹஜரத் கிப்லாக்கள் ஆகியோரைப் புனிதமானவர்கள் என்று கருதிக் கொண்டு அவர்களின் கைகளை முத்தமிட்டுவது பாக்கியம் என்ற நம்பிக்கை சிலரிடம் காணப்படுகிறது.

மிகச் சில நபித்தோழர்கள் மிகச் சில சந்தர்ப்பங்களில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் கைகளை முத்தமிட்டுள்ளதாக சில ஹதீஸ்கள் உள்ளன. அதன் நம்பகத் தன்மையில் கருத்து வேறுபாடு உள்ளது.

அவற்றை நம்பகமானது என்று வைத்துக் கொண்டாலும் அது இச்செயலுக்கு ஆதாரமாகாது.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை மகான் என்று நம்புவது மார்க்கத்தின் கடமையாகும். அல்லாஹ்வும், நபிகள் நாயகம் (ஸல்) அவர்களும் யாரை மகான்கன் என்று குறிப்பிட்டுச் சொன்னார்களோ அவர்களையும் மகான்கள் என்று நாம் நம்ப வேண்டும்.

மற்ற எவரையும் மகான் என்றோ, இறைவனுக்கு நெருக்கமானவர் என்றோ முடிவு செய்யும் அதிகாரம் நமக்கு இல்லை. நாம் மகான் என்று நினைப்பவர் இறைவனிடம் ஷைத்தானாக இருப்பதற்கும் வாய்ப்பு உள்ளது.

எனவே மகான் என்று இறைவனாலும், இறைத் தூதராலும் அறிவிக்கப்படாத அனைவரும் சமமான நிலையில் உள்ளவர்களே. இறைவனுக்கு இவர் நெருக்கமானவர் என்று யாரைப் பற்றியும் முடிவு செய்ய முடியாது எனும் போது வெறும் தாடியையும், ஜுப்பாவையும், பேச்சாற்றலையும், அரபுமொழி அறிவையும் வைத்துக் கொண்டு ஒருவரை மகான் என்று முடிவு செய்வது இறைவனது அதிகாரத்தைக் கையில் எடுக்கும் குற்றமாகும்.

ஒருவர் மகானா? அல்லவா? என்பதை நானல்லவா தீர்மானிக்க வேண்டும். இதைத் தீர்மானிக்க நீ யார்' என்று அல்லாஹ் கேட்டால் அதற்கு நம்மிடம் ஏற்கத்தக்க பதில் இல்லை.

எனவே எந்த மனிதரையும் முத்தமிட நமக்கு அனுமதி இல்லை. ஸலாம் கூறுவதும், முஸாஃபஹா செய்வதும் தவிர வேறு எதுவும் இஸ்லாத்தில் இல்லை.

ஒருவரை நல்லடியார் என்று நாம் முடிவு செய்ய முடியாது என்பதை விரிவான ஆதாரங்களுடன் அறிய அவ்லியாக்களைக் கண்டறிவது எப்படி என்ற நமது நூலைப் பார்வையிடுக!

சுருங்கச் சொல்வதென்றால்

மக்களால் மதிக்கப்படும் அறிஞர்களும், பெரியார்களும் நம்மைப் போன்ற மனிதர்கள் தான்.

நாம் அவர்களைப் பார்ப்பதோ, அவர்கள் நம்மைப் பார்ப்பதோ பாக்கியம் அல்ல.

அவர்களைத் தொடுவதோ, அவர்கள் நம்மைத் தொடுவதோ அவர்கள் தொட்டுத்தரும் பொருட்களைத் தொடுவதோ புனிதமாக ஆகாது.

அவர்களின் வாய்களிலிருந்து வரும் வார்த்தைகள் மற்ற மனிதர்களின் வாய்களில் இருந்து வரும் வார்த்தைகள் போன்றவை தான். அவற்றுக்கு எந்தச் சக்தியும் இல்லை.

அவர்களின் கைகளால் திறந்து வைக்கப்படும் வீடுகள், கடைகள் மற்ற மனிதர்களால் திறந்து வைக்கப்படும் வீடுகள் போன்றவை தான்.

அவர்கள் புனிதமானவர்கள் என்பதற்கு எந்த ஒரு ஆதாரமும் இல்லை. நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் என்பதால் அவர்கள் செய்யும் துஆவிலும், அவர்கள் வழங்கும் பொருட்களிலும் சில சந்தர்ப்பங்களில் பரகத் இருந்துள்ளது என்பதற்கு ஆதாரங்கள் உள்ளன.

அவர்களைத் தவிர மற்ற யாராக இருந்தாலும் அவர்கள் அல்லாஹ்வின் அன்பைப் பெற்றவர்கள் என்பதற்கோ, அவர்கள் பாக்கியம் பெற்றவர்கள் என்பதற்கோ, அவர்கள் நல்லடியார்கள் என்பதற்கோ ஆதாரம் இல்லாததால் அவர்களைக் கொண்டாடும் பேச்சுக்கே இடமில்லை.

அவர்கள் அனைவரும் நம்மைப் போன்ற மனிதர்களே என்று உணர்ந்து நடக்கும் நன்மக்களாக அல்லாஹ் நம்மை ஆக்கி அருள் புரிவானாக!